# அருவியூர் நகரத்தார் குரல்

திங்கள் இரண்டுக்கு ஒன்று

ஆண்டு 26 - 157
பிலவ - தை

கல்வி பண்பாடு வளர்ச்சி இதழ்

ஜனவரி 2022
புத்தகம் 2


அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழக செயலாளர் குரல் பதிப்பாசிரியருக்கு

## புகழஞ்சலி



தோற்றம்
01-04-1954

நிறைவு
06-11-2021

கல்விகாவலர்

## தெய்வத்திரு. சுப. செல்வம் B.Sc., A.C.A.


வெளியீடு

அருவியூர் வடக்குவளவு நகரத்தார்

கல்வி வளர்ச்சிக் கழகம் (பதிவு)

பிரான்மலை

# தன்னலம் கருதாத தலைவர், குரல் பதிப்பாசிரியர்
# நம் கழகச் செயலாளர் திரு சுப. செல்வம் அவர்களின்
# நினைவுகளைப் போற்றும் நினைவஞ்சலி



**உழைப்பு என்றால் செல்வம்**
**செல்வம் என்றால் உழைப்பு**

என்பதற்கு அடையாளமாக வாழ்ந்து காட்டிய நமது கல்வி வளர்ச்சிக் கழகத்தின் செயலாளர் சுப. செல்வம் அவர்கள் கடந்த 6.11.2021-ம் தேதி சனிக்கிழமை அன்று தனது இறுதிப்பயணத்தைத் தொடங்கி இம்மண்ணுலக வாழ்க்கையிலிருந்து விடுதலை பெற்று பேதங்களே இல்லாத சாந்தமும், அமைதியும், பேரானந்தமும் நிலவும் விண்ணுலகிற்குச் சென்று இறைவனோடு இரண்டறக் கலந்து விட்டார். அவரின் மறைவுச் செய்தி அறிந்து பேரதிர்ச்சியும், வேதனையும், துயரமும் அடைந்தேன். இப்படியொரு மரணம் நிகழும் என நான் எதிர்பார்க்கவில்லை. ஏன் அவருக்குக் கூட தெரியாது.

ஒரு நல்ல மனிதரை, சிறந்த பண்பாளரை தன்னலம் கருதாத ஆற்றலும் கடமை உணர்வுமிக்க செயல்வீரரை நமது கல்வி வளர்ச்சிக் கழகமும், மாணவச் செல்வங்களும் இழந்து விட்டார்கள். நமது கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு அவரின்

மறைவு ஒரு பெரிய வெற்றிடத்தை ஏற்படுத்திவிட்டது. அதை நிரப்புவது மிகவும் கடினமான செயலாகும். இது போன்றதொரு வெற்றிடம் குரல் பதிப்பாசிரியராகவும், கல்வி வளர்ச்சிக் கழகத்தின் தலைவராகவும் வழிகாட்டியாயும் திகழ்ந்த இவரின் சகோதரர் தெய்வத்திரு சுப. துரைராஜ் அவர்கள் மறைந்த சமயத்தில் ஏற்பட்டது. தனது திறமையாலும், மதிநுட்பத்தாலும் சிறப்பாகச் செயல்பட்டு, அதனை ஈடுகட்டி அந்த வெற்றிடத்தை நிரப்பி சாதனை புரிந்த மாபெரும் செயல்வீரர். அவரின் மறைவு, அவரின் மனைவி, மக்கள், சகோதரர்கள் மற்றும் உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் பேரிழப்பு என்றாலும் அதைவிட பெரிய பேரிழப்பு நமது சமுதாயத்திற்கும், நம் மாணவர்களுக்கும், கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கும் தான்.

படித்துக்கொண்டிருக்கும் மாணவர்களுக்கு அறிவார்ந்த, சிந்தனைத் திறனை வளர்க்கும் புதுபுதுச் செய்திகளை தனது இறுதி மூச்சு வரை தொய்வின்றி வழங்கிக் கொண்டேயிருந்தார். அதே போன்று படிப்பை முடித்தவர்களுக்கு வேலை வாய்ப்புச் செய்திகளை வழங்கி வந்தார். இதற்கென தனியாக ஒரு வாட்ஸ்அப் குரூப் அமைத்து திறம்பட செயல்பட்டவர். உண்மை, நேர்மை, நாணயம், சத்தியம், வாய்மை, நம்பிக்கை, சிக்கனம், இறைநம்பிக்கை போன்ற பல நற்பண்புகளுக்கு சொந்தக்காரர். தனிமனித ஒழுக்கம், பொதுநலம், காலம் தவறாமை, ஏற்றுக் கொண்ட காரியத்தை முடிக்கும் வரை ஊண் உறக்கமின்றி உழைக்கும் கடமை உணர்வு, பொறுப்புணர்வு மற்றும் அறிவாற்றலுடன் கூடிய செயல்திறன் போன்ற சிறந்த பண்புகளின் உறைவிடமாய்த் திகழ்ந்தவர்.

இவரது அண்ணனைப் போன்றே இவரும் மாணவர்களின் நலனிற்காகவும், முன்னேற்றத்திற்காகவும் தனது குடும்பத்தை விட்டுப் பிரிந்து, பொன்னமராவதியில் தங்கி உழைத்த, தன்னலம் கருதா தியாகச் செம்மல். கல்விக்கண் திறந்த கர்மவீரர் காமராஜரைப் போல், மாணவர்களை கனவு காணச் சொல்லி அவர்களின் சிந்தனையைத் தூண்டிய முன்னாள் ஜனாதிபதி A.P.J. அப்துல்கலாம் போல் நம்

சமுதாயத்திற்கு கிடைத்த அரிய பொக்கிசம் இவரும், இவரின் சகோதரர் தெய்வத்திரு சுப. துரைராஜ் அவர்களும் என்றால் மிகையாகாது. அவர்களைப் போன்று ஆட்சி அதிகாரம் செய்யும் வாய்ப்பு கிடைந்திருந்தால் உலகமே வியந்து பாராட்டக்கூடிய பல அரிய சாதனைகளைப் புரிந்து நமது சமுதாயத்திற்கும் நாட்டிற்கும் பெருமைகளைத் தேடித் தந்து சரித்திரத்தில் இடம் பிடித்திருப்பார் என்பதில் சந்தேகமில்லை.

இவரைப் போன்றே இவரின் சகோதரர் தெய்வத்திரு சுப. துரைராஜ் அவர்களும் நம் இன மாணவர்களின் கல்வி வளர்ச்சிக்காக அரும்பாடுபாட்டவர். இவர்கள் இருவருக்குமே நமது சமுதாயம் பெரிதும் நன்றிக்கடன்பட்டுள்ளது. இவர்களின் தூய தன்னலமற்ற சேவைகளையும், ஆற்றிய அரிய பணிகளையும், நமது சமுதாய வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியவைகளாகும். தங்களின் தன்னலமற்ற சேவையால் உயர்ந்து நிற்கும் இவர்களின் பெயரும், புகழும் நமது சமுதாய வரலாற்றில் நிலைத்து நிற்கும் என்பதை உறுதியிட்டுச் சொல்ல முடியும். இவர் தனது அண்ணனின் தடம் பார்த்து நடந்தாரா? அல்லது அவர் இவரின் தடம் பார்த்து நடந்தாரா என்று சொல்லமுடியாத அளவிற்கு ஒருவரை ஒருவர் மிஞ்சும் வகையில் இருவருமே சிறப்பாகச் செயல்பட்டவர்கள். இருவரும் தடம் பதித்து வாழ்ந்து மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாய் வாழ்ந்து காட்டி, வரலாற்றில் தடம் பதித்தவர்கள். மற்றவர்களின் தடம் பார்த்து வாழ்ந்தவர்கள், நடந்தவர்கள் இவர்கள் இல்லை என்பதற்கு பல உதாரணங்களைச் சொல்லலாம். நம்மவர்கள் வழங்கும் நன்கொடைகளுக்கு வருமான வரிவிலக்குப் பெற 80G எனப்படும் ஆணை பெற்றது மாபெரும் சாதனையாகும்.

குரல் பதிப்பாசிரியர்களாகப் பணியாற்றிய இவர்கள் இருவருமே நகரத்தார் குரல் இதழில் பல மாற்றங்களைச் செய்தும் புதுமைகளைப் புகுத்தியும் பெரியவர்கள், சிறியவர்கள், மாணவர்கள், மகளிர்கள் என அனைத்து தரப்பினரும் படித்து பயனடைய பல பயனுள்ள, அறிவார்ந்த செய்திகளை

வழங்கியும், அழகான வண்ண மலராகவும், அனைவரும் குரலைப் படிக்க வேண்டும் என்கிற ஆர்வத்தை தூண்டும் வகையில், எளிய நடையில் அமைத்து, குரலின் இதழை வெளியிட்டு வந்த பெருமையும் இவர்களுக்கு உண்டு.

சுப. துரைராஜ் அவர்களின் மறைவுக்கும் (04-11-2019) இவரின் மறைவிற்கும் (6-11-2021) உள்ள ஒற்றுமையின் மூலம் அவர்களின் சகோதர பாசத்தை, ரத்த பாசத்தை எண்ணி வியக்கிறேன். நல்லதொரு குடும்பம் பல்கலைக்கழகம் என்பதற்கு இவர்களும், இவர்களின் சகோதரர்களும் நல்லதொரு எடுத்துக்காட்டாகும்.

நமது சமுதாய கல்வி வளர்ச்சியில் அவருக்கும் அவரின் சகோதரர்கள் குடும்பத்தினருக்கும் உள்ள ஈடுபாடு குறித்த சில விபரங்கள் பட்டியலிடுவது சாலச் சிறந்தது என நினைக்கிறேன்.

1. தனது சகோதரர்களுடன் சேர்ந்து மே 2004-ஆம் ஆண்டில் தங்களின் தாய் தந்தையரை ரூபாய் ஒரு இலட்சம் நன்கொடை வழங்கி முதல் கல்விகாவலராக ஆக்கிய பெருமைக்குரிய குடும்பம்.
2. இவரின் மூத்த சகோதரர் தெய்வத்திரு சுப. துரைராஜ் (கல்வி வளர்ச்சிக் கழக முன்னாள் செயலாளர், தலைவர், குரல் பதிப்பாசிரியர்) அவர்கள் தனது மணிவிழாவின் போது நவம்பர் 2013-ல் ரூபாய் ஒரு லட்சம் நன்கொடை வழங்கி தன்னையும் தன் துணைவியார் திருமதி மீனாட்சி ஆச்சியையும் கல்விகாவலராக்கிக் கொண்டார்.
3. இவர் கடந்த ஜுலை 2015-ம் ஆண்டு ரூபாய் ஒரு லட்சம் நன்கொடை வழங்கி தன்னையும், தன் துணைவியார் திருமதி ஆனந்தம் ஆச்சியையும் கல்விகாவலராக இணைந்தனர்.
4. இவரின் இளைய சகோதரர் திரு சுப. நேசமணி - அருள்நிதி புவனேஸ்வரி ஆச்சி தம்பதியினர் செப்டம்பர் 2017-ம் ஆண்டு ரூபாய் ஒரு லட்சம் நன்கொடை வழங்கி தங்களை கல்வி காவலராக்கி கொண்டார்கள். நம் சமுதாயத்தில் நான்கு கல்வி காவலர்களைக் கொண்ட பெருமைக்குரிய குடும்பம்.
5. 10-ம் வகுப்பில் முதல் மதிப்பெண் பெறும் மாணவனுக்கும், 12-ம் வகுப்பில் முதல் மதிப்பெண் பெறும் மாணவனுக்கும்

தங்களின் பெற்றோர்களின் நினைவாகவும் மற்றும் செ. இளவரசன், ந. சரவணன் ஆகியோர்களும் தங்கப்பதக்கம் வழங்க நன்கொடை வழங்கி வருகிறார்கள்.

6. வெள்ளிப்பதக்கத்திற்கும் நன்கொடைகள் வழங்கி வருகிறார்கள்.

1. திருமதி மீனாட்சி துரைராசு ஆச்சி ரூ.1500/-
2. திரு சுப. ராஜகோபால் - திருமதி ரேணுகா ஆச்சி ரூ.1500/-
3. திரு சுப.இரா. சண்முகநாதன் ரூ.1500/-
4. திரு சுப. திருஞான சம்பந்தம் துளசி மெடிக்கல், ரூ.1500/-

**செல்வம் அவர்கள் அடிக்கடி சொன்ன அர்த்தம் பொதிந்த சில பொன்மொழிகள் :**

1. நாம் எவ்வளவு காலம் வாழ்கின்றோம் என்பது முக்கியமல்ல நாம் எப்படி வாழ்கின்றோம் என்பது தான் முக்கியம். ஒரு மனிதன் வாழ்ந்த காலத்தை வைத்து அவரின் வாழ்க்கை தீர்மானிக்கப்படுவது இல்லை. அவன் வாழ்ந்த காலத்தில் அவர் எப்படி வாழ்ந்தார் என்னென்ன சேவைகளை தன்னலமின்றி தூய உள்ளன்போடு செய்தார் என்பதை பொறுத்துத் தான் ஒரு மனிதர் தீர்மானிக்கப்படுகிறார்.
2. "நாடு உனக்கு என்னசெய்தது என்பதை விட நாட்டிற்கு நீ என்ன செய்தாய்" என சிந்திக்க வேண்டும் என்றார் முன்னாள் அமெரிக்க அதிபர் இந்தியாவின் நல்ல நண்பரான **ஜான் கென்னடி. "**உன் சமுதாயம் உனக்கு என்ன செய்தது என்பதை விட உலகிற்கு உன்னை அறிமுகம் செய்து உனக்கு முகவரி வழங்கிய உன் சமுதாயத்திற்கு நீ என்ன செய்தாய்**"** என்று ஒவ்வொரு நகரத்தார்களும் இரவில் படுக்கைக்கு செல்லும் முன் ஒரு கணம் சிந்திக்க வேண்டும்.
3. பிறவிகளில் மனிதப் பிறவி மகத்தானது. அந்தப் பிறவியை மகத்துவப்படுத்துவது நாம் வாழ்கின்ற வாழ்க்கை முறையில் தான் உள்ளது.
4. வாழ்க்கை என்பது உயர்ந்த குறிக்கோள். பிறருக்காக வாழும் வாழ்க்கை முறையை கடைபிடித்து வாழ்ந்து பாருங்கள். வாழ்க்கை மிகவும் மகிழ்ச்சியாக இருக்கும்.

5. வாழ்க்கை என்பது ஒரு சின்னஞ்சிறிய தீபமல்ல. அது ஒரு அற்புதமான பிரகாசமான தீப்பந்தம். நம் வருங்கால சந்ததியினரிடம் அதனை ஒப்படைப்பதற்கு முன் என்னால் முடிந்தவரை அதனை மேலும் பிரகாசமாக எரியச் செய்யவே நான் ஆசைப்படுகிறேன்.

அம்மன்குறிச்சி என்கிற ஒரு சிறிய கிராமத்தில் பிறந்து பள்ளிக்கல்வியை மன்னார்குடியில் முடித்தார். S.S.L.C- ல் முதலிடம், மாவட்ட அளவில் முதலிடம் என சாதனைகள் புரிந்தவர்கள். தமிழ்நாடு அரசு விரைவு பேருந்துக் கழகத்தில் 30 ஆண்டுகள் பணியாற்றி ஓய்வு பெற்றவர். போக்குவரத்துக் கழக உயர் அதிகாரிகளின் நன்மதிப்பையும், பாராட்டுகளையும் பெற்றவர். தான் ஏற்றுக்கொண்ட பதவிகளுக்கெல்லாம் பெருமையைத் தேடித் தந்தவர். அவரால் பதவிகள் தான் பெருமை அடைந்தன. எந்தவொரு பதவியையும் அவர் தேடிச் சென்றதில்லை. பதவிகள் தான் இவரைத் தேடி வந்தன என்பது நாம் கண்ட உண்மை.

நான் அவரோடு பழகிய காலம் மிகக்குறைவு. 2019-ல் கல்வி வளர்ச்சிக் கழகத்தில் பொறுப்பேற்றதிலிருந்து எடுத்துக் கொண்டால் சுமார் 3½ ஆண்டுகள் தான் அவரோடு பழகியிருக்கிறேன். இணைந்து செயலாற்றியிருக்கிறேன். ஆனால் 300 ஆண்டுகள் பழகியது போன்றதொரு உணர்வு எனக்கு ஏற்படுகிறது. இதைச் சொல்லும்போது ஒரு அறிஞரின் வார்த்தைகள் தான் நினைவுக்கு வருகிறது. பேரறிஞர் ஒருவரைப் பார்த்து சாரசரி மனிதன் ஒருவன் ஒரு கேள்வி கேட்கிறான். “உங்களின் வயது என்ன?” “எனக்கு வயது 360” என்றார் பேரறிஞர். இவனுக்கோ ஆச்சிரியம். அவரின் வார்த்தையை அவனால் நம்ப முடியாமல் “நீங்கள் கூறியதை தெளிவாகத் திரும்பச் சொல்லுங்கள்” என கேட்டான். எனக்கு வயது 360 என உரக்க-சத்தமாக சொன்னார். உங்கள் கூற்றை என்னால் நம்ப முடியவில்லை. 360 ஆண்டுகள் ஒரு மனிதனால் வாழ முடியுமா? உங்களுக்கு வயது 60 தான் இருக்கும். நீங்கள் பொய் சொல்கிறீர்கள் என தெரிவித்தபோது நீங்கள் சொல்வது முற்றிலும் உண்மை. எனக்கு வயது 60

தான். ஆனால் இதைப்போன்று 6 மடங்கு காலம் அதிகமாக வாழ்ந்தது போன்றதொரு மனதிருப்தியோடு வாழ்ந்திருக்கிறேன். 60 ஆண்டு காலத்தில் ஒரு மணித்துளியைக் கூட விரையம் செய்யாமல் பிறருக்கு (அடித்தட்டு மக்களுக்கு) பயன்தரும் வகையில் வாழ்ந்திருக்கிறேன். அதனால் 360 ஆண்டுகள் வாழ்ந்தது போன்றதொரு மனதிருப்தியும், மனநிறைவும் எனக்கு ஏற்பட்டுள்ளது. அதனால்தான் அவ்வாறு சொன்னேன் என விளக்கிக் கூறி மனிதனாய் பிறந்தவர்கள் வாழ வேண்டிய வாழ்க்கை முறையை அவனுக்குப் புரிய வைத்தார்.

- ❖ வாழ்க்கையில் கசப்பானதை இனிப்பாக மாற்றிக் காட்டியவர்.
- ❖ இருட்டை வெளிச்சமாக்கிக் காட்டியவர்
- ❖ நஷ்டத்தை லாபமாக்கிக் காட்டியவர்
- ❖ உடம்பையும் உள்ளத்தையும அலட்டிக் கொள்ளாதவர்.
- ❖ எது நேர்ந்தாலும் கவலைப்படாதவர்.
- ❖ அனைத்தையும் பகவானிடம் ஒப்படைத்து அமைதி கண்டவர்.
- ❖ அற்புதமான மனிதர்.

இவரைப் பற்றியும், இவரின் சேவைகளைப் பற்றியும், பண்புகளைப் பற்றியும் சொல்லிக்கொண்டே போகலாம். வார்த்தைகளால் அடக்க முடியாது. அவரின் வழி நடந்து அவரின் லட்சியங்களையும் விருப்பங்களையும், எண்ணங்களையும் நிறைவேற்ற சபதமேற்போம். அதுவே அவர் நம் மீது கொண்டிருந்த அன்பிற்கும், நம்பிக்கைக்கும் நாம் அவர் மீது கொண்டிருந்த மரியாதைக்கும் அடையாளமாகும். இது தான் நாம் அவருக்கு செலுத்தும் உண்மையான மரியாதையாகும். என்னுடைய வாழ்க்கையே இந்த உலகத்திற்கு நான் தரும் செய்தி என்றார் மகாத்மா. அதே போன்று மறைந்த நம் செயலாளர் அவர்களின் வாழ்க்கையே நமக்கு அவர் அளிக்கும் செய்தியாகும். இவரின் தடம் பார்த்து நடந்து அவரின் கொள்கை, கோட்பாடுகளையும், விட்டுச் சென்ற பணிகளையும் நிறைவேற்றுவது தான் நாம் அவருக்கு செலுத்தும் உண்மையான அஞ்சலியாகும்.




இந்துவாகப் பிறந்தால் ஒரு முறையாவது அவசியம் காசி, கயா சென்று வந்தால் புண்ணியம் என்கிறது நமது வேதம். பல நூறு ஏழைகளை காசி, கயா புனித யாத்திரைக்கு அழைத்துச் சென்று அவர்களுக்கு புண்ணியத்தை தேடிக் கொடுத்த குடும்பம். காசி புனித யாத்திரையை ராமேஸ்வரத்தில் தீர்த்தமாடி வழிபட்டு நிறைவு செய்வதுதான் முறையான புனித யாத்திரை முறை என்று நம்பப்படுகிறது. ராமபிரான் சிவபெருமானை வழிபட்ட புண்ணிய ஸ்தலமான இராமேஸ்வரத்தில் நம்மவர்கள் தங்கி இறைவனை வழிபட (திருச்செந்தூருக்கு ஒரு சண்முகநாதரைப் போல ராமேஸ்வரத்திற்கு ஒரு சுப. ராஜகோபால் செட்டியார்–திருமதி ரேணுகா ஆச்சி )தங்கும் விடுதி அமைத்துக் கொடுத்த குடும்பம்.

அவரை இழந்து தவிக்கும் அவரின் மனைவி, மக்கள்சகோதரர்கள் குடும்பத்தினர் அனைவரும் மற்றும் கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகிகள், மேலாளர் ஆகியோருக்கும் எனது வருத்தத்தையும், ஆழ்ந்த இரங்கலையும் தெரிவித்துக் கொள்கின்றேன். அவரின் பிரிவை தாங்கும் மனவலிமையையும் சக்தியையும் இறைவன் இவர்களுக்கு வழங்க வேண்டி பிரார்த்திக்கிறேன். அவரின் ஆன்மா இறைவன் நிழலில் இளைப்பாறி சாந்தி அடைய இறைவனை பிரார்த்திக்கிறேன்.

ஜனமும் பூமியில் புதியது இல்லை
மரணத்தைப் போல் ஓர் பழையதும் இல்லை
இரண்டும் இல்லாவிட்டால் இயற்கையும் இல்லை
இயற்கையின் ஆணைதான் ஞானத்தின் எல்லை

செ. ஆசை அலங்காரம், தலைவர், கல்வி வளர்ச்சிக் கழகம்.

## பொன்மொழி

பிறருடைய மனதைக் கவர்வது
நம்முடைய அழகோ அறிவோ இல்லை.
நாம் பழகும் விதமும்
பிறரை நாம் மதிக்கும் குணமும் மட்டுமே.

- D. கிருத்திக்வாசன்

# திரு சுப. செல்வம்

## செயலாளர் அவர்கள் ஆற்றிய சமுதாயப் பணிகள்.

| | | |
|---|---|---|
| 1991 | - | சென்னை சங்கம் தோன்ற காரணமாக இருந்தவர்களில் இவரும் ஒருவர். |
| 1994-97 | - | சென்னை சங்கப் பொருளாளர் |
| 2004-2006 | - | சென்னை சங்கத் தலைவராக பணிபுரிந்துள்ளார்கள். இன்று சென்னை சங்கப் புரவலராக உள்ளார். |
| 16-01-1982 | - | அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம் ஆரம்பமானபோது அன்று நடைபெற்ற முதல் கூட்டத்தில் பங்கு பெற்றிருந்தார். |
| 2004 | - | தனது சகோதரர்களுடன் சேர்ந்து தனது பெற்றோரை முதல் கல்விக்காவலர் ஆக்கியுள்ளார்கள். |
| மே 2015 | - | தன்னை கல்விக்காவலராக இணைத்துக் கொண்டார். |
| 2015-18 | - | கல்வி வளர்ச்சிக் கழக துணைப் பொறுப்பாளர்களில் ஒருவராக இருந்து பணிபுரிந்துள்ளார்கள். |
| 2018 | - | பொதுநலச் சங்க செயற்குழு கூட்டத்தில் மருத்துவ திட்டத்தைத் தொடர வலியுறுத்தினார்கள். அத்திட்டத்திற்கு அப்போதே ரூ.5000/- நன்கொடை வழங்கியுள்ளார்கள். |
| 2018-21 | - | கல்வி வளர்ச்சிக் கழக செயலாளராக பொறுப்பேற்று அதன் வளர்ச்சிக்காக திறம்பட பணியாற்றியவர். |

இவர் தமிழ்நாடு அரசு விரைவு போக்குவரத்துக் கழகத்தில் Chief Accounts Officer-ஆக சிறப்பாக பணியாற்றி ஓய்வு பெற்றுள்ளார்கள்.

| | | |
|---|---|---|
| 2021-2024 | - | மீண்டும் கல்வி வளர்ச்சி கழகத்தின் செயலாளராக ஏகமனதாகத் தேர்வு செய்யப்பட்டார். |

**செ. ஆசை அலங்காரம், தலைவர், கல்வி வளர்ச்சிக் கழகம்.**



## மறைந்த கல்வி வளர்ச்சிக் கழகச் செயலாளர்

# திரு சுப. செல்வம்

## அவர்களின் நினைவைப் போற்றும் நினைவஞ்சலிச் செய்தி

திரு சுப. செல்வம் அவர்கள் கல்வி வளர்ச்சிக் கழகச் செயலாளராகத் தலைவர் திரு செ. ஆசை அலங்காரம் அவர்களுடன் இணைந்து (2018-21)-ல் மூன்றாண்டுகள் செயல்பட்டுச் சிறந்த நிர்வாகி என்று பலராலும் போற்றப்பட்டவர்.

இந்தக் காலகட்டத்தில் கல்வி வளர்ச்சிக் கழகத்தில் 3 வள்ளல்கள், 4 பெரும்புரவலர்கள் & 9 புரவலர்கள் புதிதாக சேர்ந்து கொள்வதற்கும் மற்றும் 9 புதிய கல்விகாவலர்கள் கழகத்தோடு இணைந்து கொள்வதற்கும் திரு சுப. செல்வம் அவர்களின் முயற்சி பாராட்டுக்கு உரியதாகும்.

இவரது மேற்பார்வையில் கொட்டாம்பட்டியில் உள்ள வணிக வளாகத்தில் முதல் மாடியில் 5 அறைகள் புதிதாகக் கட்டப்பட்டு வாடகைக்கு விடப்பட்டதோடு பின்புறமுள்ள காலி இடம் வாகனங்கள் நிறுத்திக் கொள்ள வாடகைக்கு விடப்பட்டுள்ளது. தவிர வணிக வாளகக் கடை மாத வாடகை ரூ.2000/- லிருந்து ரூ.3000/- ஆக உயர்த்தப்பட்டது. இவ்வாறு வருமானத்தைப் பெருக்க எடுக்கப்பட்ட நடவடிக்கையில் இவரது பங்கு குறிப்பிடத்தகுந்த தாகும்.

சுப. செல்வம் அவர்களின் பணிக் காலத்தில் 2018-2019 ஆம் ஆண்டுக்கு சிறுகுடி, கம்பிளியம்பட்டி, சொக்கம்பட்டி, கொட்டாம்பட்டி மற்றும் பிரான்மலை ஆகிய ஊர்களில் உள்ள அரசுப் பள்ளிகளுக்கு புரவலர் நன்கொடையாக பள்ளி ஒன்றுக்கு ரூ.5000/- வீதம் ரூ.25,000/- வழங்கப்பட்டது. அதே போல் 2019-20-ம் ஆண்டில் புழுதிபட்டி, கட்டுக்குடிபட்டி, ஆலவயல், V. புதூர் மற்றும் செம்பூதி அரசுப்பள்ளிகளுக்கு தலா ரூ.5000/- வீதம் ரூ.25000/- புரவலர் நன்கொடையாக வழங்கப்பட்டது. தாய் தந்தை இல்லாத ஆதரவற்ற ஏழ்மையில் வாழும் சிறுகுடி M. மீனாட்சியின் பள்ளிப் படிப்பிற்கு உரிய

கல்விக்கட்டணம் செலுத்த சுப. செல்வம் அவர்கள் ஏற்றுக் கொண்டார். அவரது இந்தச் செயல் போற்றுதலுக்கும், பாராட்டுக்கும் உரியதாகும்.

அருவியூர் நகரத்தார் குரல் வெளியிடும் பொறுப்பை வகித்து வந்த சுப. செல்வம் அவர்களின் தமையனார் தெய்வத்திரு சுப. துரைராஜ் அவர்கள் 03-11-2019-ல் மறைந்து விடவே சுப. செல்வம் அவர்கள் அந்தப் பொறுப்பை ஏற்று நவம்பர் 2021 வரை அருவியூர் நகரத்தார் குரல் இதழை மிகச் சிறப்பான முறையில் ஆசிரியர் பணியாற்றி வெளியிட்டுள்ளார். இதற்கு நகரத்தார் பெருமக்கள் அனைவரின் பாராட்டையும் பெற்றுள்ளார்.

கல்வி வளர்ச்சிக் கழகச் செயலாளராக திரு சுப. செல்வம் அவர்களே 2021-24 ஆண்டுகளுக்கும் மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால் எதிர்பாராதவிதமாக திரு சுப. செல்வம் 06-11-2021-ல் நம்மை விட்டுப் பிரிந்துவிட்டார். அவரது மறைவு கல்வி வளர்ச்சிக் கழகத்துக்கும், நமது சமூகத்துக்கும் ஈடு செய்ய முடியாத பேரிழப்பாகும்.

திரு சுப. செல்வம் அவர்களின் நினைவைப் போற்றும் வகையில் இந்த நினைவஞ்சலிச் செய்தி சமர்ப்பிக்கப்பட்டுள்ளது.

**– திரு சொ. வைத்திலிங்கம், குரல் நிறுவிய ஆசிரியர் மதுரை**

## ஐயா செல்வம் செட்டியார் அவர்களுக்கு இரங்கற் ‘பா’

ஏங்குகின்றோம் ஐயா இணைந்து
அரிவியூர் பெற்ற அருள்நிறைவே ஆற்றல்
புரிந்திருந்த பேரமுதே பூமணமே உரியவர்
நாங்கள் இருந்து நனைகிறோம் கண்ணீரில்
ஏங்குகின்றோம் ஐயா இணைந்து

**– கவிஞர் ம.சி.கு.கு. கணேசன், கோவை**

# பாதங்கள் பாதுகாக்கப்பட வேண்டும்



முகத்துக்கு நாம் தருகின்ற முககயததுவததைப பாதங்களுக்கு நாம் தருவதில்லை. ஆனால் பாதங்கள் தான் உடலின் எடையைச் சுமக்கின்றன என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. அவற்றைப் பேணிப் பாதுகாப்பதில் அலட்சியம் காட்டினால் அவை நம்மை நடக்க இயலாமல் முடக்கிவிடும். சர்க்கரை நோயால் அவதிப்படுபவர்களுக்குப் பாதப் பாதுகாப்பு 100% அவசியம். உலக அளவில், சர்க்கரை நோயால் பாதிக்கப்பட்டுள்ளவர்களில் 30 விநாடிகளுக்கு ஒருவர் தனது கால்களில் ஏதோ ஒரு பகுதியை இழக்கிறார்கள், அதாவது விபத்து ஏற்படாமலேயே.

## பாதங்கள் பாதிக்கப்படுவதற்கான காரணங்கள் என்ன?

பாதங்களில் மிக நுண்ணிய நரம்புகள் உள்ளன. இவை பாதங்களுக்குத் தொடு உணர்ச்சி, வலி, சூடு, குளிர்ச்சி போன்ற உணர்வுகளை அறிவதற்குப் பயன்படுகின்றன. உதாரணமாக ஒரு முள் பாதத்தில் தைத்தால் அந்த நிகழ்வு மூளைக்குக் கொண்டு செல்லப்பட்டு மூளை அதைக் கிரகித்துக் கொண்டு வலி என்ற புரிதலை - செய்தியைக் கால் பாதங்களுக்கு இந்த நுட்பமான பொடி நரம்புகள் வாயிலாக அனுப்பி வைக்கும். நாம் வலியை உணர்ந்து காலை உடனே எடுத்துக் கொள்கிறோம். இதுபோல் தான் சூடு குளிர்ச்சி போன்ற உணர்வுகளும், சர்க்கரை நோயைக் கட்டுக்குள் வைக்காவிடில், இந்த நரம்புகள் பாதிக்கப்பட்டுச் செயலிழந்து விடுகின்றன. வலி தெரியாது. பாதங்கள் தொடப்படுவது தெரியாமல் மரத்துப் போய் விடுகிறது. வலி தெரியாததால் ஏற்படும் காயம் ஆழமாக எலும்பு வரை ஊடுருவும் அபாயம் உண்டாகிறது.

## அடுத்தது இரத்த ஓட்டம்

உடலில் இரத்த ஓட்டம் சீராக எல்லா பகுதிக்கும் செல்லும் வரை மட்டுமே எல்லா உறுப்புகளும் உயிர்ப்புடன் செயல்பட முடியும். ஏனென்றால் இரத்தத்தின் மூலமாகத்தான் உயிர்

வாழத் தேவையான ஆக்சிசன், ஊட்டச்சத்து போன்றவை திசுக்களைச் சென்று சேர்க்கின்றன. அளவுக்கதிகமான சர்க்கரை, உயர் இரத்த அழுத்தம் ஆகிய நோய்கள் இரத்தக் குழாய்களில் பாதிப்பு ஏற்படுத்தி இரத்த ஓட்டத்தைத் தடை செய்து விடுகின்றன.

**மூன்றாவது காரணம்,** உயிர்ப்பிழந்த (இறந்த) திசுக்களை நுண்கிருமிகள் ஊடுருவி ஆக்கிரமித்துக் கொஞ்சம் கொஞ்சமாகச் சாப்பிட்டுவிடும். இதில் அபாயம் என்னவென்றால் இந்த நுண்கிருமிகள் மிகவும் சக்தி வாய்ந்த ஆண்டிபயாடிக் மருந்துகளால் கூட அழிக்க முடியாதவையாக இருக்கும் என்பது தான். அப்படிப் பாதிக்கப்பட்ட பாதங்கள் அழுகிவிடுகின்றன. அவற்றை அப்படியே விட்டுவிட்டால் தொற்று உடலின் மற்ற உறுப்புக்களுக்கும் பரவி நோயாளியின் உயிருக்கே உலை வைத்து விடும். எனவே பாதிக்கப்பட்ட கால், விரல்கள், பாதம், கணுக்கால், முழுங்கால் என்று பல மட்டங்களில் அகற்ற வேண்டிய சூழ்நிலை ஏற்படும்.

## சர்க்கரை நோயாளி ஒருவருக்குக் கால்பாதிப்பு உள்ளதா என்பதை எவ்வாறு அறிந்து கொள்வது?

கால்பாதங்களில் வீக்கம், சிறு கொப்புளங்கள், உள் மடங்கி வளரும் நகங்கள், பாதங்களின் அடியில் சிறு மருக்கள், புண்கள், ஏழு நாட்களுக்கு மேல் ஆறாத புண், பாதங்கள் சிவந்து போதல், பாதங்களில் மேல் உள்ள தோலின் நிறம் மாறுதல், புண்ணிலிருந்து துர்நாற்றம் வீசுதல், இரத்தம் வடிவது போன்ற அறிகுறிகள் மூலமாக அறியலாம்.

முன்பே குறிப்பிட்டது போல நுண்ணிய நரம்புகள் செயலிழப்பதால் பெரிய புண்ணாக இருந்தாலும் வலிக்காது. ஆரம்பக் காலங்களில் கால்கள் ஈரப்பசையின்றி புண்ணாகி விடும் அல்லது புண்ணாகும் வரை சொரிந்தால் தான் அரிப்பு மட்டுப்படும் (குறையும்)

## கால்கள் இழப்பைத் தடுப்பது எப்படி?

முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை மேற்கொள்வதால் மட்டுமே கால் பாதிப்பை தடுக்க முடியும். சர்க்கரை நோயைக்

கட்டுப்பாட்டில் வைத்திருப்பது மிகவும் முக்கியமான ஒன்று. இரத்தத்தில் சர்க்கரை அளவை உணவுக்கு முன்பு 100 மி.கி. லிருந்து 120 மி.கி.க்குள்ளும், உணவருந்தி 2 மணி நேரம் கழித்து 160 மி.கி.லிருந்து 180 மி.கி.க்குள் பராமரிக்க வேண்டும். எக்காரணம் கொண்டும் இது 200 மி.கி.முக்கு மேல் செல்லக்கூடாது. மூன்று மாத சராசரி சர்க்கரை அளவை 7% வைத்திருக்க வேண்டும். இரத்தச் சர்க்கரை மட்டும் அல்ல இரத்த அழுத்தம் 130/80 மி.மீ.க்குள் பேணப்பட வேண்டும்.

## கால் பாதங்களில் கவனம் செலுத்துவது எப்படி?

எக்காரணம் கொண்டும் வெறும் காலில் நடக்கக் கூடாது. காலணிகள் தேர்வு செய்யும்போது சரியான அளவில் இருக்க வேண்டும். மிகவும் இறுக்கமான கூரான முனைகளையுடைய ஷுக்கள் அணிவது தவிர்க்கப்பட வேண்டும்.

காலணிகள் உட்புறம் மிருதுவாகவும் மற்றும் அடிப்பகுதி கடினமாகவும் இருத்தல் நலம். தினமும் இரவு படுக்கைக்குச் செல்லும் முன் கால்களைச் சோப்பு மற்றும் தண்ணீர் கொண்டு சுத்தமாக கழுவி விட்டுப் பிறகு ஈரமில்லாமல் துடைக்க வேண்டும். சிறிதளவு தேங்காய் எண்ணெய் தடவுவதால் பாதங்களும் கால்களும் வறண்டு போகாமல் இருக்கும். பாதங்களின் அடிப்புறத்தை ஒரு முகம் பார்க்கும் கண்ணாடியின் உதவியால் அவ்வப்போது பரிசோதிக்க வேண்டும். அவ்வாறு செய்யும் போது புண்கள், சிவப்பு நிறமாக இருக்கிறதா என்று பார்க்க வேண்டும்.

நீண்ட நேரம் கால்களை மடக்கி அமர்வது, கால் மேல் கால் போட்டுக்கொண்டு உட்காருவது போன்ற பழக்கங்கள் இரத்த ஓட்டத்தைத் தடை செய்யுமாதலால் அவைகள் தவிர்க்கப்பட வேண்டும். காலணிகளை (குறிப்பாக ஷு,பூட்ஸ்) அணிந்து கொள்வதற்கு முன்பு, அவற்றின் உட்புறத்தைப் பரிசோதிக்க வேண்டும். ஏனெனில் சிலசமயம் ஆணி போன்ற பொருட்கள், சோடா பாட்டில் மூடி, குழந்தைகளின் விளையாட்டுச் சாமான்கள் உள்ளே இருக்க வாய்ப்புள்ளது.

தினமும் 30 அல்லது 45 நிமிடங்கள் நடை பயிற்சி அவசியம், ஆண்டுக்கு ஒரு முறை கால்களுக்கான சிறப்புப் பரிசோதனைகளைச் செய்து கொள்ள வேண்டும். தாமாகவே கத்தி, கூர்மையான கருவிகள், பிளேடு போன்ற பொருட்களைப் பயன்படுத்திப் பாதங்களில் உள்ள தோலை வெட்டுவது, மருக்களை அகற்றுவது மிகவும் ஆபத்தானது.

மதமதப்பு, எரிச்சல், வலி ஏற்பட்டால் அதற்கான மாத்திரைகள், களிம்புகள் ஆகியவற்றை தக்க முறையான மருத்துவ ஆலோசனை பெற்றுப் பயன்படுத்தலாம், இரத்த ஓட்டம் குறைந்துள்ளதா என்று கண்டறியப் பரிசோதனைகள் உள்ளன. இரத்த ஓட்டத்தை அதிகரிக்க மருந்து மாத்திரைகள் மற்றும் அறுவைச் சிகிச்சைகளும் உள்ளன. எனவே சர்க்கரை நோயால் பாதிக்கப்பட்டு அவதியுறுபவர்கள் கால் பாதுகாப்பில் தனிக் கவனம் செலுத்துவதன் மூலமாக அபாயகரமான கால் இழப்பைத் தவிர்ப்பதுடன், உறுதியான அழகான கால்களால் வீறு நடை போட்டு நலமோடு வாழலாம்.

**–D. பிரியதர்சினி B.Sc., (Nutrition), திண்டுக்கல்**

உ

ஸ்ரீ வயிரவ சுவாமி துணை

வாழ்த்துகளுடன்

கடை: 94432 06431
97867 46431

வீடு: 97874 81103

# சிவசக்தி ஸ்டோர்ஸ்



279, அண்ணாசாலை,
**பொன்னமராவதி.**

**மளிகை, ஆயில், ஸ்டேசனரி மற்றும் குளிர்பானங்கள் மொத்தம் & சில்லறை**

# அன்னம் டிரேடர்ஸ்



வடுகநாதன் ரோடு,
KVB பேங்க் அருகில்,
**பொன்னமராவதி.**



ஸ்டாக்கிஸ்ட்:
**நெஸ்டில், மைசூர் சோப், ராஜம் சுக்கு காபி, பண்ணாரி மைதா.**

# ராநா கெஸ்ட் ஹவுஸ்

KVB பேங்க் அருகில், **பொன்னமராவதி.**

முற்றிலும் குளிரூட்டப்பட்ட (A/C) ரூம்கள்,
சிறிய பெரிய அளவுகளில், நிறைந்த வசதிகளுடன்,
நிறைவான கட்டணத்தில்,
நகரின் மத்தியில் தரமான தங்கும் விடுதி.



# மனநிலை



கொடைவள்ளல் கர்ணன் தன்னிடம் வந்து பொருள் கேட்பவர்களுக்கு இல்லை என்று சொல்லாத கருணை நெஞ்சம் கொண்டவன். ஒரு நாள் அவன், தங்கக் கிண்ணம் ஒன்றில் எண்ணெய் வைத்து தேய்த்துக் கொண்டிருந்தான்.அப்போது பகவான் கிருஷ்ணர் அங்கு வந்தார். கர்ணன் மகிழ்வுடன் அவரை வரவேற்றான். கர்ணனின் கொடைத்திறத்தைச் சோதிக்க விரும்பிய கிருஷ்ணர், "கர்ணா! நீ வைத்திருக்கும் தங்கக்கிண்ணம் எவ்வளவு அழகாக இருக்கிறது! அதை எனக்குக் கொடேன்" என்று கேட்டார்.

"கிருஷ்ணா! பிரபஞ்சத்தையே ஆளும் தலைவன் நீ! இந்த அற்பப்பொருளான தங்கக்கிண்ணத்தைக் கேட்கிறாயே! இருந்தாலும் இதோ தருகிறேன்" என்று கிண்ணத்தை எடுத்து அவரிடம் நீட்டினான்.

கர்ணனின் செயலைக் கண்ட கிருஷ்ணர் ஒரு கணம் அதிர்ந்து விட்டார். காரணம் கர்ணன் இடதுகையால் அக்கிண்ணத்தை கிருஷ்ணருக்கு கொடுத்தது தான். "இடதுகையால் தானம் கொடுக்கக் கூடாது என்பது கூட அறியாதவனா நீ? உன் செயல் கண்டிக்கத்தக்கது" என்று கிருஷ்ணர் கோபப்பட்டார்.

"பிரபு! என்னை மன்னித்து விடுங்கள். வலதுகையில் எண்ணெய் இருக்கிறது. கையைச் சுத்தம் செய்து வருவதற்குள் மனம் சஞ்சலப்பட்டு விட்டால் தாங்கள் கேட்டதை கொடுக்க வேண்டும்' என்ற நல்ல எண்ணம் மாறிவிடலாம். மனம் நிலைதடுமாறக்கூடியது, மனம் ஒரு குரங்கு என்பதை தாங்கள் அறிவீர்கள் அல்லவா? நினைத்ததை நினைத்தவுடன் செய்ய வேண்டும் என்ற நல்ல எண்ணத்தில் தான் வேகமாக இடதுகையால் தங்களுக்கு கிண்ணத்தை அளித்தேன். என்னை மன்னியுங்கள்" என்றான்.

பார்த்தீர்களா! மனம் என்னும் குரங்கு எவ்வளவு வேகமாக மாறக்கூடியது என்பதை, கொடைவள்ளல் கர்ணனுக்கே தன் மனநிலை மாறிவிடுமோ என்ற சந்தேகம் இருந்ததென்றால், நாமெல்லாம் எம்மாத்திரம். எனவே செய்ய நினைத்த தர்மத்தை உடனே செய்து அதன் பலனை அனுபவியுங்கள்.

கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு நன்கொடைகள் வழங்கவேண்டும் என்கிற எண்ணம் உங்கள் மனதில் அவ்வப்போது ஏற்படும்; அப்பொழுதே உங்களால் முடிந்த நன்கொடைகளை வழங்கி, கல்வி வளர்ச்சிக்கு உதவிடுங்கள். அந்த தர்மத்தின் பலனை அடைந்திடுங்கள். **– தலைவர், கல்வி வளர்ச்சிக் கழகம்**



# கல்வி வளர்ச்சிக் கழக முன்னேற்றத்திற்காக அரும்பணியாற்றி இறைவனடி சேர்ந்த எனது உடன்பிறவா அன்புச் சகோதரர் சுப. செல்வம் அவர்களுக்கு இதய அஞ்சலி

தோன்றிற் புகழோடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று - குறள்

அருள்மிகு நெடுவயல் ஸ்ரீசிவந்தி விநாயகர் குல தெய்வத்தையும்,
அம்மன்குறிச்சி மீனாட்சி சுந்தரேஸ்வரரையும் வழிபாடு செய்தவர்!
அருவியூர் நகரத்தார் பொதுநலச்சங்கமும்,
கல்வி வளர்ச்சிக் கழகமும் இணைந்து
கும்பாபிஷேக மலர் சிறப்புடன் வெளிவர
அல்லும் பகலும் அயராது பாடுபட்ட உழைப்பின் சிகரம்!
ஆன்மீகப்பணியில் மிகவும் ஈடுபாடு கொண்ட
கோவில் சொ.அ. மாணிக்கம் செட்டியாரை தாய்மாமனாகக் கொண்டவர்.
இராமேஸ்வரத்தில் இலவச தங்கும் விடுதியும்
காசிக்கு இலவசமாக யாத்திரை மேற்கொள்ள
குடும்பத்தினரில் மூளையாக செயல்பட்டவர்!
ஈன்றெடுத்த தெய்வத்திரு வெ.ராம. சுப்பிரமணியன் - அன்னபூரணி
தம்பதியருக்கு ஈடில்லா புகழையும் பெருமையையும் சேர்த்தவர்!
இன்முகம் அன்பான உபசரிப்பு பெயரிலும் நடப்பிலும்
இல்லறமே நல்லறம் என்ற ஆனந்தம் அவரின் வாழ்க்கைத் துணை
ஊருக்கும் உறவினர்களுக்கும் நற்செயல்கள் செய்யவும்
ஆன்மாவிற்கு நல்ல எண்ணங்களையும் தந்து வாழ்ந்திட
அறிவுரை வழங்கி, எங்களுடைய மனத்தில்
மறக்க முடியாத அளவுக்கு பாசத்தையும் அன்பையும்
புன்சிரிப்பையும் கொடுத்துவிட்டு,
இம்மண்ணுலகை விட்டு விண்ணுலகம் சென்றவர்!
ஏற்றமிகு வாழ்க்கையில் ஆஸ்திக்கு இளவரசன்,
ஆசைக்கு ஆனந்தலட்சுமி என இரண்டு செல்வங்களை
ஈன்றெடுத்த தம்பதியர்
ஐவர் சகோதரர்கள் பஞ்சபாண்டவர்களாக குடும்ப ஒற்றுமையுடன்
வாழ்வாங்கு வாழ்ந்து கல்விகாவலர்களாக பெருமை சேர்த்தவர்கள்
இறுதி மூச்சு உள்ளவரை கல்வி வளர்ச்சிக் கழக நலனுக்காக
தன்னலமின்றி உழைத்து உன்னத நிலையை அடைந்தவருக்கு
இதய அஞ்சலி

**- திரு V. கணேசன் B.Sc. தலைவர் அ.வ.ந. சங்கம், V. புதூர்**

உ

வாழ்க வையகம் வாழ்க வளமுடன்

# நினைவஞ்சலி

தோற்றம்
01-04-1954



நிறைவு
06-11-2021

**சுப. செல்வம்** B.Sc., A.C.A.

அம்மன்குறிச்சியை பூர்வீகமாகக் கொண்ட சென்னையில் வாழ்ந்து வந்த தெய்வத்திருவாளர்கள் சுப்பிரமணியன் செட்டியார் - அன்னபூரணி ஆச்சி தம்பதியருக்கு இரண்டாவது மகனாக பிறந்தார். பட்டப்படிப்பு படித்து பட்டயகணக்காளர் படிப்பிலும் தேர்வு பெற்று தமிழ்நாடு அரசு விரைவுப் பேருந்து போக்குவரத்துக் கழகத்தில் அக்கவுண்ட் பிரிவு மேனேஜராக சிறப்பாகப் பணி செய்தார்.

உண்மை, உழைப்பு, நேர்மை இவற்றைத் தன் வாழ்நாள் கொள்கையாக ஏற்று சிறப்பாக வாழ்ந்து வந்தார். உரிய காலத்தில் பொன்னமராவதியில் வாழ்ந்து வந்த வள்ளல் மாணிக்கம் செட்டியார்-சரஸ்வதி ஆச்சி தம்பதியினரின் புதல்வி ஆனந்தத்தை வாழ்க்கைத் துணையாக ஏற்று இளவரசன் என்ற மகனும், ஆனந்தலெட்சுமி என்ற மகளும் பெற்று மகிழ்வுடன் வாழ்ந்து வந்தனர். மகன், மகள் இருவரும் சிறப்பாக குடும்பத்துடன் வாழ்ந்து வருகின்றனர்.

புதல்வன் படித்துவரும் காலத்தில் சாதி சான்று பள்ளியில் பதியும் போது அரசு சலுகை பெறும் பொருட்டு பிற்படுத்தப்பட்ட செட்டியார் பிரிவில் பதியும்படி வேண்டியவர்கள் கேட்டுக்கொண்டும், தன்னுடைய கொள்கைப்படி செல்வம் அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. அதன் காரணமாக புதல்வன் இளவரசன் 12-ம் வகுப்பில் நல்ல மதிப்பெண் பெற்றும் மிகச்சிறிய வித்தியாசத்தில் மருத்துவப்படிப்பில் சேர

முடியாமல் கணிணிப் பொறியாளர் படிப்பை மேற்கொள்ள வேண்டி வந்தது. தன்னுடைய கடமையில் நேர்மையை உறுதியாகக் கடைபிடித்த காரணத்தால், தான் பணிசெய்த அலுவலகத்தில் தனது மேல் அதிகாரிகளின் நேர்மைக்கு மாறான வேலைகளில் ஒத்துழைக்காத காரணத்தால் வேலை மாறுதல்களைப் பலமுறை ஏற்கவேண்டி வந்தது. அதனால் தனக்கும், குடும்பத்துக்கும் ஏற்படும் சிரமங்களைப் பார்க்காமல் நேர்மையாக பணி செய்து ஓய்வு பெற்றார்.

திரு சுப. செல்வம் அவர்கள் பிறவிக் குணமாக மற்றவர்களுக்கு பொருளதவி, உடல் உழைப்பால் உதவி தனது கல்வியறிவால் உதவி என்று இயன்றதை செய்து வந்தார். தனது பணி ஓய்வுக்குப்பின் தான் சார்ந்த நமது சமூகத்திற்கு தன்னால் இயன்ற பணியாற்ற வேண்டும் அதன் பொருட்டு சமூக மக்கள் பயன் பெற வேண்டும் என்று கருதினார்.அந்த நிலையில் நமது கல்வி வளர்ச்சிக் கழகத்தில் செயலாளராக பொறுப்பை ஏற்று பணி செய்ய வேண்டும் என்று பலர் கேட்டுக்கொண்டதற்கிணங்க பொறுப்பை ஏற்று 3½ ஆண்டுகள் அந்தப்பணியை சிறப்பாகச் செய்தார். செயலாளர் பொறுப்பில் இருந்த காலத்தில் தனது முழு நேரத்தையும் மாணவர்கள் பயன்பெறும் விதத்தில் மேற்படிப்பு, வேலைவாய்ப்பு, அரசு சலுகைகள் அனைத்தையும் அறிந்து தனது வாட்ஸ்அப் தளத்திலும், நமது நகரத்தார் புத்தகத்திலும்
அறியச் செய்தார். அதனால் பயன்பெற்றவர்கள் பலர்.

நமது நாட்டில் கொரோனா தொற்று காரணமாக அரசாங்கம் லாக்டவுன் உத்தரவு பிறப்பித்திருந்தது. அக்காலத்தில் இல்லங்களில் இருக்கும் பெண்களும், மாணவ மாணவிகளும் பயன்பெறும் விதத்தில் நினைவாற்றலும் பக்தியும் மேம்பட பக்திப்பாடல்கள் படித்து மனப்பாடம் செய்து, வாட்ஸ்அப் மூலம் பாடி அனுப்ப ஏற்பாடு செய்து அதற்குப் பரிசுகள் தன்னுடைய சகோதரர்களுடன் இணைந்து வழங்கினார்.

பொதுவாக நமது இந்து கலாசாரத்தில் நமது மக்கள் வாழ்வில் ஒருமுறையாவது காசி-இராமேஸ்வரம் சென்று கங்கையிலும், கடலிலும் நீராடி சுவாமி தரிசனம் செய்து வந்தால் பிறவிப் பயனை அடைந்ததாக கருதப்படுகிறது.

ஆனால் பலர் அதற்கான வசதி வாய்ப்பு இல்லாமல் இருப்பவர்கள் காசி - இராமேஸ்வரம் புனிதப் பயணம் மேற்கொள்ள தனது சகோதரர்களுடன் இணைந்து செயலாற்றினார்.

இராமேஸ்வரத்தில் நமது சமூகத்தினர் ஆன்மிகப் பயணம் செல்லும்போது இலவசமாக தங்குவதற்கு வசதியாக இராமேஸ்வரத்தில் தனது சகோதரருடன் இணைந்து தங்கும் விடுதி ஒன்றை நிறுவினார்.

ஆன்மிகத்தில் இறைவனிடம் தமது பக்தியைச் செலுத்தி இறைவனை வேண்டுதல் முதல் ரகம். இறைவன் நம்மை விரும்பும் விதத்தில் வாழ்வை அமைத்து வாழ்ந்து இறையருளைப் பெறுவது என்பது மற்றொரு விதம். அப்படி இரண்டு விதங்களிலும் தான் இருந்த காலத்தில் வாழ்ந்து இறையருளுடன் மறைந்தார்.

திருப்போரூர் தவத்திரு சிவப்பிரகாச சுவாமிகள் இறைவணக்கத்தின்போது நாம் ஒவ்வொருவரும் கீழே குறிப்பிட்ட பாடலைக் கூறி இறை வழிபாடு செய்ய அருளியுள்ளார்.

நோயுற்றுடராமல் நொந்துமனம் வாடாமல்
பாயில் கிடவாமல் பாவியென காயத்தை
ஓர் நொடிக்குள் நீக்கி ஒன்போரூர் தேவா
உன் சீரடிக்கீழ் வைப்பாய் தெரிந்தே

இந்தப் பாடலின்படி சுப. செல்வம் அவர்கள் மரண பயம், மரண அவஸ்தை இல்லாமல் இறைவனுடன் இணைந்துவிட்டார். இறைவன் தனக்கு விருப்பமானவர்களை விரைந்து ஏற்றுக்கொள்வார் என்பதற்கிணங்க தெய்வத்திரு சுப. செல்வம் அவர்களை இறைவன் தன்னுடன் அழைத்துக் கொண்டார்

அன்னாரது தொண்டையும், தோழமையையும், நேர்மையையும் போற்றுவோமாக!

**– வை. முத்துராமன், அம்பாள் மெடிக்கல்ஸ், பொன்னமராவதி**

## பொன்மொழி

வாழும்வரை நம்மை யாரும் வெறுக்கக் கூடாது
வாழ்நாளுக்குப்பின் நம்மை யாரும் மறக்கக் கூடாது.

**– G. தீபா M.Sc., சிறுகுடி**

# மன அழுத்தம்

ஒவ்வொருடைய வாழ்க்கையிலும் இருக்க வேண்டியது நிம்மதி. பலரிடம் இந்த நிம்மதி இல்லாமல் உள்ளது. மனஅழுத்தமே நிம்மதி இழப்பிற்கு காரணமாக அமைகிறது. மன அழுத்தம் இன்று அதிகம் பேசப்படும் ஒரு உளவியல் பிரச்சனை. உடலை விட மன ரீதியான பிரச்சனைகளால் பாதிக்கப்படுவோர் தான் இன்று அதிகம். வாழ்வியல் முறையில் ஏற்படும் மாற்றங்களே இதற்கு முக்கிய காரணம்.

நாம் வசிக்கும் வீட்டில், நாம் பணிபுரியும் அலுவலகத்தில், ஏன் நாம் சென்றுவரும் வழியில் கூட மன அழுத்தம் ஏற்பட்டுவிடுகிறது. இன்றைய வாழ்க்கை முறையில் மனஅழுத்தம் ஏற்படுவது தவிர்க்க முடியாததாகிறது. எனவே மன அழுத்தத்தை அகற்ற வேண்டிய வழிமுறைகளைக் கையாள வேண்டும். இதை ஒவ்வொருவரும் அறிந்து கொண்டால் மன அழுத்தத்திலிருந்து விடுபடலாம். இவ்வாறு மன அழுத்தத்திலிருந்து விடுபட்டால் நோய் நொடியின்றி வாழலாம். மன அழுத்தம் வயது வித்தியாசமின்றி அனைவருக்கும் ஏற்படுகிறது.

உங்களை நீங்களே கவனித்துக் கொள்ளவில்லை என்றால் மனதளவில் நீங்கள் அதிகம் பாதிக்கப்பட்டிருக்கலாம். அலுவலகத்தில் ஓய்வின்றி வேலை செய்வது, அன்றாட வேலைகளைச் செய்ய சிரமப்படுவது, உங்களுடைய உடல் நலத்தை சரியாக பேணாதது, உங்கள் மனதை இலகுவாக்கும் செயல்களை புறக்கணிப்பது என்றிருந்தால் மனம் பாதிக்கப்பட வாய்ப்புள்ளது.

பசி குறைதல், சாப்பிடாமல் இருத்தல், அதிக பசி ஆகியவை மன அழுத்தம் உள்ளவர்களுக்கு ஏற்படலாம். இதனால் உணவு உண்ண ஆர்வமின்றி எடை குறைகிறது. சோம்பேறித்தனம் வளரும். இவர்கள் எந்தவொரு வேலையையும் நம்பிக்கையுடன் செய்யமாட்டார்கள். இதனால்

வேலையின் மீது ஆர்வம் குறைய வாய்ப்புள்ளது. காலப்போக்கில் மற்றவர்களிடமிருந்து தன்னை தனிமைப்படுத்திக் கொள்வார்கள். சமூகத்திலிருந்தும் தங்களை ஒதுக்கிக் கொள்வார்கள். அதனால் மனஅழுத்தத்தை கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பது ஒன்றே சிறந்த வழி.

வழக்கத்தை விட அதிகமாக எரிச்சலடைவது, பதட்டப்படுவது அதிகப்படியான எதிர்மறை உணர்வு உங்களுக்கு இருந்தால் உங்களுக்கு மனரீதியான ஒரு இடைவெளி தேவை. இந்த எரிச்சல், கோபம் எல்லாம் உங்களை விரக்திக்கு எடுத்துச் செல்லும்.

மன அழுத்தத்திலிருந்து விடுபட உடற்பயிற்சி, யோகாசனம், தியானம், நல்ல பொழுது போக்கு, விளையாட்டு பயிற்சி, இனிமையான நல்ல பாடல்களைக் கேட்டல், தெய்வபக்தி, தன்னம்பிக்கையான மனநிலை போன்றவை மூலம் மன அழுத்தத்தைப் போக்கலாம்.

மன அழுத்தம் என்பது அவ்வப்போது எல்லோரும் உணரக்கூடியது தான். ஆனால் அது நீண்ட நேரம் தொடர்ந்தால் தான் பிரச்சனை. இதுவும் கடந்து போகும் என்று அதனைக் கடந்து விடுங்கள். உங்கள் மனதை பாதிக்கக் கூடிய அந்தப் பிரச்சனைக்கு தீர்வு காணுங்கள். இல்லையெனில் அதை ஏற்றுக்கொண்டு அதை விட்டு விடுங்கள். மன அழுத்தத்தை சரிசெய்ய உங்களுக்குப் பிடித்த விஷயங்களில் கவனம் செலுத்துங்கள். நாள் முழுவதும் உங்களை பிசியாக வைத்துக் கொள்ளுங்கள். பழைய நிலைக்குத் திரும்ப நண்பர்கள், குடும்பத்தினரின் உதவியை நாடலாம். அதன் பின்னும் மன அழுத்தம் அதிகரிக்கும் பட்சத்தில் உடனடியாக மனநல மருத்துவரை அணுகுவது நல்லது. மனம் பாதிக்கப்பட்டால் உடல்நலமும் பாதிக்கப்படும். எனவே இரண்டும் ஆரோக்கியமாக இருக்க மனதை உற்சாகமாக வைத்துக் கொள்ளுங்கள்.

**– G. திவ்யா M.Sc., B.Ed.,**

கவிதாஞ்சலி

# செல்வம் சென்றது எங்கே?



கற்றறிந்து வித்தகன் ஆதல் செல்வம்!
கற்றபடி வாழ்தலும் செல்வம்!
உற்றவர்க்கும் மற்றவர்க்கும் உதவுதல் செல்வம்!
ஓய்வின்றி உழைப்பதுவும் செல்வம்!
பெற்றவர்கள் பெருமைபெற வாழ்தல் செல்வம்!
பெரியோரைப் பேணுவதும் செல்வம்!
மற்றவரை மகிழ்வித்து மனம்குளிர்தல் செல்வம்!
மரணித்தும்வாழ்வது மாபெரும் செல்வம்!
கள்ளமில்லா உள்ளம் வாய்த்தல் செல்வம்!
கனிவான மொழிகூடச் செல்வம்!
நல்லவர்கள் நட்பை நாடுதல் செல்வம்!
நம்பியவர்க்கு உண்மையாதல் செல்வம்!
இளவரசனாய் ஒருமகன் இருத்தல் செல்வம்!
இனியபேரப் பிள்ளைகளும் செல்வம்!
இல்லாளால் ஆனந்தம் எய்துதல் செல்வம்!
இத்தனையும் இல்லறத்தின் செல்வம்!
அன்பும் அறனும் அமைய வாழ்தல் செல்வம்!
அன்னபூரணியே தாயானதும் செல்வம்!
எண்ணத்தில் விசாலமான மருமகளும் செல்வம்!
இலட்சுமியாய் மகள் வாழ்வதும் செல்வம்!
சின்னச் சின்ன கோபம் கூடச் செல்வம்!
சிரிப்பே முகத்தின் செல்வம்!
மன்னென வாழ மனம்கொளல் செல்வம்!
மானமும் பொறுமையும் செல்வம்!
இன்னவகைச் செல்வம் எல்லாம் இருந்தும்
எச்செல்வம் குறையுதென ஏக்கம் கொண்டாரோ!
சொன்னயிச் செல்வங்கள் சுவர்க்கம் தராதென்று;
அந்தமில்செல்வம் அடையவே பிறவியென,
பண்ணவேண்டிய பலபணிகள் பாக்கி வைத்து,
என்ன அவசரம் என்று போனாரோ!
தேடினும் கிடைக்காத் திருவடிச் செல்வம்
நாடிப்போன நம் செல்வம்

**– கவிஞர் முல்லைவேந்தன் (V.N. சுந்தரம்), திருவையாறு.**

# அ.வ. நகரத்தார் கல்வி வளர்ச்சிக் கழகத்தின் 40ம் ஆண்டு பாராட்டு & பரிசளிப்பு விழா நிகழ்வுகள்














**25-12-2021 • பிரான்மலை**

உ

# 3ம் ஆண்டு நினைவு அஞ்சலி



**தெய்வத்திருமதி. A. விஜயலட்சுமி ஆச்சி**
பொன்னமராவதி

நினைவு நாள்: **30-01-2019**

**எங்களைப் பிரிந்து சிவபாதம் சேர்ந்த உங்களுக்கு**
**கண்ணீர் மலர்தூவி அஞ்சலி செலுத்துகிறோம்**
**என்றும் உங்கள் நினைவில் வாழும்**

**சிறுகுடி ஸ்ரீ பாப்பாத்தி அம்மன்**
**சாமியாடி குடும்பத்தார்கள்**

கணவர்: **திரு G. அன்புச் செல்வன்**
மகன்: **திரு A. குபேந்திரன்**
அலைபேசி எண்கள்:
**99423 07869, 86675 09383**

## பிரான்மலை அருவியூர் வடக்குவளவு நகரத்தார் பொதுநலச் சங்கம், செயற்குழுக் கூட்ட நிகழ்வுகள்

பிரான்மலை அருவியூர் வடக்குவளவு நகரத்தார் பொதுநலச் சங்கத்தின் முதல் செயற்குழுக் கூட்டம் 12-12-2021 ஞாயிற்றுக்கிழமை அன்று காலை 11-00 மணிக்கு பிரான்மலை மங்கைநாயகர் மண்டபத்தில் நடைபெற்றது.

செயற்குழுக் கூட்டத்தில் அனைத்து ஊர் நகரத்தார் செயற்குழு உறுப்பினர்கள் 85 நபர்கள் கலந்து கொண்டார்கள். நமது சங்கத்தின் துணைத் தலைவர் திரு இளங்கோ செட்டியார் அவர்கள் அனைவரையும் வரவேற்றார். தலைவர் திரு M.S. முருகப்பன் செட்டியார் அவர்கள் தலைமை உரையாற்றினார், செயலர் திரு மு. சாமிநாதன் செட்டியார் அவர்கள் செயலர் அறிக்கையையும், பொருளாளர் திரு S. மங்கைபாகன் செட்டியார் அவர்கள் வரவு செலவு அறிக்கையையும் தாக்கல் செய்தார்கள்.

நமது சமூக வளர்ச்சி தொடர்பாக செயற்குழு உறுப்பினர்களின் கருத்துக்களின் அடிப்படையில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. துணைச் செயலாளர் திரு M. சரவணன் செட்டியார் அவர்கள் அனைவருக்கும் நன்றி கூறினார்.

**– மு. சாமிநாதன், செயலாளர், அ.வ.ந. சங்கம், பிரான்மலை.**

## இரங்கல் செய்தி



கல்வி வளர்ச்சிக் கழகச் செயலாளர் திரு சுப. செல்வம் அவர்கள் 6-11-2021 அன்று இறைவனடி சேர்ந்த செய்தி அறிந்து மிகவும் வேதனை அடைந்தேன். கழகத்திற்கு அரும் பெரும் பணியாற்றி உள்ளார். அவரது இழப்பை யாராலும் ஈடு செய்ய இயலாது. அண்ணாரது ஆத்மா சாந்தியடைய எல்லாம் வல்ல இறைவனை பிரார்த்திக்கின்றேன்.



**– திரு C.R. மாணிக்கம், பிரான்மலை.**

உ

அருள்மிகு மங்கை நாயகர் துணை

## அருவியூர் வடக்குவளவு நகரத்தார் கல்வி வளர்ச்சிக் கழகத்தின் செயலாளரும். குரல் பதிப்பாசிரியருமான

# திரு சுப. செல்வம் அவர்களுக்கு புகழஞ்சலி

நம் சமுதாயத்தின் முதல் கல்விக் காவலர் தெய்வத்திருவாளர்கள் வெ.ராம. சுப்பிரமணியன்-சுப. அன்னபூரணி ஆச்சி ஆகியோருக்கு பஞ்சபாண்டவர் போல் ஐந்து புதல்வர்கள் அவர்களில், இரண்டாவது மகனாகப் பிறந்தவர் திரு சுப. செல்வம் ஆவார். தமிழ்நாடு அரசு விரைவு போக்குவரத்துக் கழகத்தில் உதவி மேலாளராகப் பணிபுரிந்த இவர், தனது ஓய்வுக்குப்பின் சமுதாய நலனில் அக்கறை கொண்டும், நம் இன மாணவர்கள் கல்வியில் முன்னேற வேண்டும் என்ற உயரிய சிந்தனையில், தன் தமையனார் தெய்வத்திரு சுப. துரைராஜ் அவர்களைத் தொடர்ந்து, கல்வி வளர்ச்சிக் கழகத்தின் தலைவர் திரு S. ஆசை அலங்காரம் B.Sc., அவர்களுடன் இணைந்து நம் சமுதாய மாணவமணிகள் கல்வியில் முன்னேற பல வழிகளில் ஆக்கப்பூர்வமான பணிகளை மேற்கொண்டு அயராது பாடுபட்டவர். தன் தமையனார் தெய்வத்திரு சுப. துரைராஜ் அவர்களின் மறைவுக்குப் பிறகு நகரத்தார் குரல் பொறுப்பாசிரியராகவும் இருந்து பல அரும் பெரும் கருத்துக்களை குரல் வாயிலாக சமுதாயத்திற்கு தெரிவித்தார். மாணவர்களுக்கு மாணவர்களே உதவ சுழலும் நூலகத் திட்டத்தைக் கொண்டு வந்தார். 12.09.2019-ல் நடைபெற்ற அருள்மிகு மங்கைநாயகர்-தேனம்மை குடமுழுக்கு நன்னீராட்டு விழாவினையொட்டி, பொதுநலச் சங்கம் வெளியிட விரும்பிய கும்பாபிஷேக மலரின் பொறுப்பாசிரியராகப் பொறுப்பேற்று மலர் சிறப்பாக வெளிவர எங்களுடன் இணைந்து அயராது பாடுபட்டார்.

அவரது எதிர்பாராத திடீர் மரணம் நம் சமுதாயத்திற்குப் பேரிழப்பாகும். அவரை இழந்து வாடும் அவரது குடும்பத்தினருக்கு எனது ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டு, அவரின் ஆன்மா சாந்தியடைய எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

**- Er. M. மாணிக்கம் D.E.E. முன்னாள் தலைவர், அவ.ந. பொதுநலச்சங்கம்.**

# பொங்கல் வாழ்த்து

அன்பிற்கும், பண்பிற்கும் உரிய ...
இனிய நகரத்தார் பெருமக்களே...
தைப் பொங்கல் திருநாளை
கொண்டாடி மகிழ்ந்திட!
ஆர்வமுடனும், உற்சாகத்துடனும்
உழைத்துக் கொண்டிருப்பீர்கள்!
தை பிறந்தால் நல்வழி பிறக்கும்
என முன்னோர்கள் போற்றினர்!
தரணி போற்றும் தைமாதம்
தமிழர்கள் கூடி ஒன்றினைய !
வருகிறது பொங்கல் திருநாள்
இல்லங்களில் வர்ணங்கள் தீட்டி!
வண்ண வண்ண கோலங்கள்!
வாசல் எங்கும் மலர்ந்திட!
புத்தாடை பொன்மேனிதனில்
தவழ்ந்து அழகு சேர்க்க!
புதுப்பானையில் பொங்கலிட்டு!
சூர்யபகவானுக்கு படையலிட்டு!
தைமாதப் பிறப்பினை
பொங்கல் திருநாளாகப் போற்றி!
குலவையிட்டு வாழ்த்தி
வணங்கிடுவோம் இறைவனை!
சுகபோக செல்வங்கள் செழிக்க!
செல்லக் குழந்தைகள் கூடிட!
இன்பப் பொங்கலைப் பெருநாளாக!
இனிதே கொண்டாடி மகிழ்ந்திடுவோம்!
நம் மக்கள் அனைவருக்கும்
பொங்கல் திருநாள் நல்வாழ்த்துகள்!!



N. சேதுராமன்
சேலம்

# 2020-2021 ல் பெருந்தொகை வழங்கிய நன்கொடையாளர்கள் 31.03.2021

**மாபெருங்கொடை வள்ளல்கள் :**

1. திரு. **A.P. ஸேதுராமன் – விஜயலட்சுமி,** கோவை.
2. திரு. **செல்வன் R.M. செந்தில்,** பொன்.புதுப்பட்டி.
3. திரு. **சொ. இராமநாதன் – சிவசக்தி** (செம்பதி) துபாய்.

**பெருங்கொடை வள்ளல்கள் :**

1. திரு. **சொ. வைத்திலிங்கம் செட்டியார் – பாப்பா ஆச்சி,** மதுரை.

**கொடை வள்ளல்கள் :**

1. திருமதி. **இராம. லதா அவர்கள்,** நத்தம்.
2. திரு. **து. அரவிந்த் குமார் B.E., M.S., – பத்மா B.E.,** சென்னை.
3. தெய்வத்திரு. STKR. **சக்திவேல் – ராஜலெட்சுமி,** பொன்னமராவதி.

**வள்ளல்கள் :**

1. திரு. **M. பாலகிருஷ்ணன் – பானுமதி ஆச்சி,** சிங்கம்புணரி.
2. திரு. **செ. ஆசை அலங்காரம் குடும்பத்தார்,** சிறுகுடி.
3. திரு. **M.S. முருகப்பன்,** பொன்னமராவதி.
4. திரு. **சொ. முருகேசன் – கவிதா,** சிவகாசி.
5. திரு. A. முருகன் - செல்வமணி நீடாமங்கலம்
6. திரு. T.M.R.S. சிவக்குமார் - அருணோதயம், கோவை
7. திரு. ம.சி.கு.கு. கணேசன் செட்டியார் - தென்னசரசி ஆச்சி கோவை

**6-12 மாணவர்களுக்கு உதவித்தொகை வழங்கும் நன்கொடையாளர்கள்**

1. **சிங்கம்புணரி மீனாட்சி நல்லதம்பி வலச்சேரிப்பட்டி தெய்வானை வள்ளியப்பன்** நினைவாக அவந பொதுநலச்சங்கம், பிரான்மலை.
2. தெய்வத்திரு. **மு.அ. பரமசிவம் செட்டியார் – அங்கம்மாள் ஆச்சி** குடும்பத்தார், பொன்.புதுப்பட்டி.
3. திரு. **சொ. வைத்திலிங்கம் செட்டியார் – பாப்பா ஆச்சி** குடும்பத்தார், மதுரை.
4. திரு. **தே.மா. பழனிச்சாமி செட்டியார் – பழ. சரஸ்வதி ஆச்சி** குடும்பத்தார், பொன்.புதுப்பட்டி.
5. தெய்வத்திரு. **தீ.பழ. பொன்னுச்சாமி செட்டியார் – அன்னமயிலி ஆச்சி** நினைவாக A.P. **ஸேதுராமன் – விஜயலட்சுமி,** கோவை.

**தங்கப்பதக்கம் வழங்கும் நன்கொடையாளர்கள் : 10ஆம் வகுப்பு**

1. முதல் கல்வி காவலர் நினைவாக, கல்விக்காவலர், கல்வி தாய் தந்தை சுப.நேசமணி செட்டியார் - புவனேஸ்வரி ஆச்சி சார்பாக கேப்டன். நே. சரவணன் பிரியா - சச்சின் நங்கநல்லூர் - சென்னை - 61
2. **அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம்,** கோவை.
3. திரு. **ஆ. ஆறுமுகம் – சாந்தி,** கோவை.

**12ஆம் வகுப்பு**

4. திரு. **அரு.சோம. சண்முகநாதன் – சிவகாமி,** தூத்துக்குடி.
5. முதல் கல்வி காவலர் நினைவாக கல்விகாவலர். சுப. செல்வம் செட்டியார் ஆனந்தம் ஆச்சி சார்பாக செ.இளவரசன் - விசாலா. நங்கநல்லூர், சென்னை - 61



# கல்வியை வெறுக்கும் குழந்தையை எவ்வாறு கையாள்வது?

கல்வியை வெறுக்கும் குழந்தையை அவர்களின் செயல்பாடுகள் மூலமாகவே நாம் அறிந்துகொள்ள வேண்டும். அவர்களுடன் உரையாடலின் மூலமாகவே நாம் அறிந்து கொண்டு அவர்களுக்கு கல்வியை கற்க கடினமான விஷயம் என்னவென்று கேட்டு அறிந்து அதை நீக்க நாம் முழுவதுமாக செயல்பட வேண்டும்.

கல்வியில் ஆர்வம் இல்லாததற்கு அவர்களின் மன நிலையும் ஒரு காரணம் ஆகும். அந்த மனநிலையை கண்காணித்து அவர்கள் ஏன் அவ்வாறு நடந்து கொள்கிறார்கள் என்ற காரணத்தை கண்டுபிடித்து முற்றிலும் நீக்கி விட்டாலே குழந்தைகள் கல்வியை வெறுக்க மாட்டார்கள்.

## கல்வியை வெறுக்கும் காரணத்தை கண்டறிதல் :

குழந்தைகள் கல்வியை வெறுப்பது உண்மையல்ல. அதிலுள்ள கடினமான விஷயம், புரியாத பாடங்கள் ஆகியவற்றை பெற்றோரிடம் கூற பயப்படுவதால் தான் அவர்கள் கல்வியை வெறுக்கிறார்கள். இதை நாம் புரிந்து கொண்டு செயல்பட்டால் பெற்றோர்கள் அவர்களை கையாளுவது எளிதாகிவிடும்.

## கல்வியைத் தவிர மற்ற நடவடிக்கைகளில் ஈடுபடுதல் :

எடுத்துக்காட்டாக விளையாட்டு, இசை போன்றவற்றில் கல்வியை விட ஆர்வம் அதிகமாக இருத்தல். ஆசிரியர் கூறும் பாடங்களை ஒழுங்காக கவனம் இல்லாமல் இருத்தல். பெற்றோர்கள் வீட்டில் உள்ள கல்வியில் சிறந்து விளங்கும் மற்ற பிள்ளைகளுடன், கல்வியில் குறைவான ஆர்வம் உள்ள வரை ஒப்பிட்டுப் பேசுவது, அவர்கள் கல்வியில் ஆர்வம் இல்லாமல் தொடர்ந்து இருக்க வழிவகுக்கிறது. இதை பெற்றோர்கள் நன்றாக கவனித்து இந்த தவறுகளைச் செய்யாமல் இருந்தாலே அவர்கள் கல்வியை வெறுக்கும் காரணத்தைப் பெற்றோரிடம் கூறுவார்கள்.

## விளையாட்டின் மூலமாக கல்வி கற்றுக் கொடுத்தல்:

குழந்தைகளை இன்று சிறு வயது முதலே அனுப்பப்படும் அனைத்து பள்ளிகளிலும் பாடங்கள் விளையாட்டின் மூலமே கற்பிக்கப்படுகின்றன. காணொளிக் காட்சிகள் மூலம் கல்வியை நன்றாக கவனிக்கிறார்கள். பாடல்கள் பாடி நடத்தும் போது அவர்களின் ஆர்வம் இன்னும் அதிகமாகிறது. ஒரு தாளில் படங்கள் வரைந்து கதை சொல்லச் சொல்லி விளையாடுதல், அதனால் அவர்களின் சிந்தனைத் திறன் மிகுந்த அளவு பெருகுகிறது.

மனப்பாடம் செய்யும் பாடங்களை அவர்களுக்குப் பிடித்த பாடலின் மெட்டுக்கள் வைத்து மனப்பாடம் செய்ய வைத்தால் அவர்கள் இன்னும் சந்தோஷமாகவும், எளிதாகவும் மனப்பாட பகுதியை படிக்க வாய்ப்புள்ளது.

## சாதரணமாக படித்தவர்கள் சாதனையை கூறல்:

சாதாரணமாக படித்தவர்கள் என்று கூறுவதை விட புரிந்து படித்தவர்கள் என்று கூறலாம். இதை ஆங்கிலத்தில் புத்திசாலி வேலை (smart work) மற்றும் கடினமான வேலை (Hard work) என்று கூறுவார்கள். இதில் இவர்கள் புத்திசாலியான வேலையை செய்ய தேர்ந்தெடுத்து செயல்படுவார்கள்.இவர்கள் குறைந்த நேரத்தில் மிக வேகமாக படிப்பவர்கள் - வேலை செய்பவர்கள் என்று கூறலாம். மேலும் தன்னுடைய சாதனையை அடைய கடினமாக உழைப்பவர்கள். ஆனால் புத்திசாலித்தனமாக செயல்படுவார்கள். படிக்க வேண்டிய பாடங்களை ஒரு முறை படித்தாலும் அதை எந்நேரத்திலும் ஞாபகங்களை வைக்கக்கூடிய மனப்பான்மை உடையவர்கள். இதனால் இவர்களின் படிக்கும் நேரம் அதிகமாக செலவாவது இல்லை. இந்த பழக்க வழக்கங்களை உடைய சாதனையாளர்களை பற்றி கூறி குழந்தைகளை படிப்பில் எளிதாக படித்து விடலாம் என்ற ஆர்வத்தை ஊட்டலாம்.

## உன்னால் முடியும்:

பெற்றோர்கள் குழந்தைகளிடம் உன்னால் முடியும் என்ற நம்பிக்கையை மனதில் திடமாக பதியவைக்க வேண்டும். மாதா,

பிதா, குரு தெய்வம் ஆகியோரை மதிக்க வேண்டும், அவர்களை வணங்கவேண்டும் என்று கூறுவதைப் போல் பெற்றோர், ஆசிரியர், இறைநம்பிக்கையை குழந்தைகளிடம் வளர்க்க வேண்டும். மனதளவில் இவர்கள் நம்முடன் இருக்கிறார்கள் என்ற நம்பிக்கையை ஊட்டுவதன் மூலம் அவர்களை ஊக்கப்படுத்தி புத்துணர்ச்சியை வளர்த்துக் கொள்ளலாம்.

## கல்வியின் சிறப்பு, முக்கியத்துவத்தை வலியுறுத்தல்:

கல்வி ஒருவனுக்கு மிகவும் முக்கியமான ஒன்று. இதன்மூலம் அவன் எந்நிலையில் இருந்தாலும் வாழ்வில் உயர்ந்த நிலைக்கு அவனைக் கொண்டு செல்கிறது. அவனைப் பார்க்கும் மற்றவர்களுக்கும் சாதனைகள் புரிய வேண்டும் என்ற ஊக்கத்தை அளிக்கிறது. குழந்தைகள் சமுதாயத்தில் தடையின்றி இயற்கையாக வளர இத்தகைய கல்வியானது உதவுகிறது. குழந்தைகள் தங்களுடைய முழு திறனை வளர்க்க கல்வி முழுப் பங்கு வகிக்கிறது. **–தலைவர், கல்வி வளர்ச்சிக் கழகம்**

# கழக அறிவிப்புகள்

**1. கல்விக் கடனை திருப்பிச் செலுத்துதல் :**

கல்விக்கடன் பெற்று ஜுன் 2020-க்கு முன்னர் படிப்பை முடித்தவர்கள் அனைவரும் தங்களது கல்விக் கடனை திருப்பிச் செலுத்தி முடிக்க வேண்டுகின்றோம்.

கல்வி வளர்ச்சிக் கழகத்திடமிருந்து கல்விக்கடன் பெற்று மார்ச்/ஜுன் 2021-இல் படித்து முடித்தவர்கள் மார்ச்/ ஜுன் 2022-க்குள் திருப்பிச் செலுத்த வேண்டும் என்பதை நினைவூட்டுகிறோம். ஏற்கனவே கல்விக் கடன் பெற்றவர்களில் முழுவதுமாக செலுத்தாதவர்கள் மேலும் தாமதிக்காமல் உடனடியாக செலுத்த வேண்டுகிறோம்.

மாணவர்கள் தங்கள் கடன் தொகையை இந்தியன் வங்கி, புதுப்பட்டி கிளை மூலம் அனுப்பி வைக்க வேண்டுகிறோம்.

பணம் அனுப்ப வங்கி கணக்கு விவரங்கள்:

| | |
|---|---|
| வங்கி | : இந்தியன் வங்கி, புதுப்பட்டி கிளை |
| கணக்கின் பெயர் | : AVN Kalvi Valarchi Kazhagam |
| SB Account No. | : 4937 40102 |
| IFSC Code | : IDIB000P052. |

பணத்தை வங்கியில் கட்டியவுடன், பணம் கட்டிய ரசீதின் Counterfoil ஜெராக்ஸ் காபியை உடனே தபால் மூலமாக அல்லது கல்வி வளர்ச்சிக் கழக இ-மெயில் மூலமாக அனுப்பி வைக்க வேண்டும். அது கிடைத்த பின்தான் ரசீது அனுப்பி வைக்கப்படும். கல்வி வளர்ச்சிக் கழக இ-மெயில் முகவரி avnkalvi@gmail.com.

**- செ. ஆசை அலங்காரம், தலைவர், கல்வி வளர்ச்சிக் கழகம்**

## காப்புகட்டு விழா

பூர்வீகம் ஆலவயல், சென்னை, பள்ளிக்கரணை திரு PV. கண்ணன் செட்டியார் - புவனேஸ்வரி ஆச்சி இவர்களது மகன் வழிப் பேரனும், திரு RM. சுப்பிரமணியன் செட்டியார்-ராஜேஸ்வரி ஆச்சி, பொன்னமராவதி, இவர்களது மகள் வழிப் பேரனும். திரு K. ராம்குமார் B.C.A. - பவித்ரா B.E. (EEE). இவர்களின் ஆண் குழந்தைக்கு காப்பு கட்டு விழா 06-12-2021 திங்கட்கிழமை அன்று மிக சிறப்பாக நடைபெற்றது. விழாவுக்கு வருகை தந்திருந்த உறவினர்கள் மற்றும் நண்பர்கள் குழந்தையை வாழ்த்தி மகிழ்ந்தனர்.

**தகவல் : திரு PV. கண்ணன், பள்ளிக்கரணை, சென்னை.**



# உன்னை விடமாட்டேன்

வேலவனே, உன் விளையாட்டின் தன்மை.
எப்படி இருக்குமென எவர்க்கும் தெரியவில்லை
அழவிட்டு, ஒரு வீட்டில் ஆண்கள் சிலரை,
தாக்கிய கொரனாவை தடுக்காது விட்டதேன்?
கோலமயில் ஒருத்தியை கொண்டு போனாயே,
கைக்குழந்தையுடன் கணவனைத் தவிக்க விட்டு
ஞாலத்தில் இவையெல்லாம் நடப்பதுதான் தேறு எனில்;
என்வீட்டில் நடக்கையில் எப்படித் தேறுவது?

வாழும் நாளில் உனையன்றி வேறு ஒரு நினைப்பில்லை,
ஓலமிடும் பிள்ளைக்கு உன்பதில் என்ன குகா?
தாழும்போது தாங்குவாய், என்று தானே;
நாளும் உனை நம்பிநம்பித் தொழுகிறோம்
ஆயினும் ஆறுமுகா, அல்லல்தான் வாழ்வென்றால்;
ஆண்டவனே! அருளிலை ஆகில் அச்சம் வராதா?
துயரும் மனத்துன்பத்தை துடைத்
ல வந்து இரு!

கயிற்று ஊஞ்சலென கலங்குவார் உள்ளத்தை
மயிலேறி வந்து, மருந்திட்டுக் காப்பாற்று!
மறுபடி மறுபடி, உம்மிடம் மன்றாடலன்றி
மார்க்கமென்ன எமக்கு, மாலவன் மருகா!
ஏறுவதும் இறங்குவதும் எல்லோர்க்கும் உண்டுஎனில்
எமது இதயத்தை இரும்பாக மாற்றிவிடு! து எடு!
புலம்பும் புத்திரரின் புத்தியினைத் தேற்றுஅஞ்சாதே என்றருள் அருகிே
கலங்கடிக்கும் விளையாட்டை காட்டாது நிறுத்து!

நலங்கள் வேண்டி நாங்கள் செய்யும்
உளங்கொள் வழிபாட்டை உவந்துநீ ஏற்று;
வளங்கொள் வாழ்வு வழங்கிடல் வேண்டாம்!
உளமார வாழமட்டும் ஒருவழி காட்டு!
பழங்கொளப் பழனிப் பதிவந்த ஞானப் பழமே;
உயிர் உள்ளளவும் உன்னைவிடவே மாட்டேன்

**– கவிஞர் முல்லைவேந்தன், திருவையாறு**

# கல்விக் காவலர்கள்

1. **மே 2004 : முதல் கல்விக் காவலர், ஆமலூருடையார், தெய்வத்திரு. வெ.ராம. சுப்பிரமணியன் செட்டியார் – அன்னபூரணி ஆச்சி அவர்கள், அம்மன் குறிச்சி, சென்னை.**
2. ஜூலை 2004 : மேலூருடையார், **திரு. தே.மா. பழனிச்சாமி செட்டியார் – திருமதி. சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
3. செப்டம்பர் 2006 : கழனிவாசலூருடையார் **திரு.நா. சுப்பிரமணியன்** BSc., CAIIB **திருமதி. தமிழ்ச்செல்வி** B.Lit., அவர்கள், கல்லம்பட்டி, சென்னை.
4. **மார்ச் 2007 : நாவலூருடையார், திரு. ச. கனகசபை B.E., மனோரஞ்சிதம்** அவர்கள், உலகம்பட்டி, திருச்சி.
5. ஜூலை 2007 : கழூகக்கூருடையார், **தெய்வத்திரு. இராம. வேலாயுதம் செட்டியார் – பார்வதி ஆச்சி** அவர்கள், படமிஞ்சி, சென்னை.
6. நவம்பர் 2007 : கழனிவாசலூருடையார், **தெய்வத்திரு. மு.சி.கி. நாராயணன் செட்டியார் – இராஜமாணிக்கம் ஆச்சி** அவர்கள்,கல்லம்பட்டி.
7. மே 2010 : சிக்கலூருடையார், **தெய்வத்திரு. நல்லாசிரியர் மெ. இளங்கோ – சாவித்திரி** அவர்கள். வா.புதூர்.
8. ஜூலை 2011 : அரும்பாக்கிளையார். திரு. **M.M. தியாகராஜன் B.Sc., தெய்வத் திருமதி. ஜோதிமணி** அவர்கள் புழுதிப்பட்டி. மதுரை.
9. ஜனவரி 2012 : பொன்னமராவதி பூண்டிலூருடையார். தெய்வத்திரு. மா. தங்கராஜன் – அழகுமீனாள் அவர்கள், புழுதிபட்டி பெங்களூரு.
10. மார்ச் 2012 : கழூகக்கூருடையார். **தெய்வத்திரு. மு.ஆ. இராமசாமி செட்டியார். தெய்வத்திருமதி. இராஜாமணி ஆச்சி,** சொக்கம்பட்டி.
11. மே 2012 : நாவலூருடையார், **திரு. ச. சொக்கலிங்கம் செட்டியார் – தெய்வத்திருமதி. தனபாக்கியம் ஆச்சி** அவர்கள் உலகம்பட்டி.
12. **ஜூலை 2012 : கழனிவாசலூருடையார். திரு. P.L. இராமஜெயம், பத்மாவதி அவர்கள், பொன்னமராவதி.**
13. **செப்டம்பர் 2012** : கழூகக்கூருடையார். **தெய்வத்திரு.** M.S.M. **மாணிக்கம் செட்டியார் – சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
14. **நவம்பர் 2012 :** பணப்பாக்குழூருடையார், **தெய்வத்திரு. கு. சொக்கலிங்கம் செட்டியார் – நலமுடன் திருமதி. சொ. தேனம்மாள் ஆச்சி,** செம்பூதி.
15. மார்ச் 2013 - அரும்பாக்கிளையார், **தெய்வத்திரு. இராம. கதிரேசன் செட்டியார். திருமதி.முத்துலெட்சுமி ஆச்சி,** புழுதிப்பட்டி.
16. **மே 2013 : மேலூருடையார். தெய்வத்திரு. தே.மா. நாராயணன் செட்டியார் – சண்முகவள்ளி ஆச்சி,** பொன்னமராவதி.
17. ஜூலை 2013 : பூதமங்கலமூருடையார். **திரு. ச. இராமலிங்கம் – இராஜமாணிக்கம்,** அயனாவரம். சென்னை.
18. நவம்பர் 2013 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. துரைராசு செட்டியார் – மீனாட்சி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை

19. ஜனவரி 2014 : நாவலூருடையார். **தெய்வத்திரு. அரு. வேலாயுதம் செட்டியார் – சம்பூர்ணம் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.

**20. மார்ச் 2014 : பூதமங்கலமுருடையார். திரு. R. பரமசிவம் B.E., தெய்வத்திருமதி. சிவகாம சுந்தரி, பொன்னமராவதி, சென்னை.**

**21. ஜனவரி 2015 : பூதமங்கலமுருடையார். திரு. அ.சொ. சண்முகம் செட்டியார் – ஜெயபாரதி ஆச்சி, அம்மன்குறிச்சி, திருச்சி.**

**22. மார்ச் 2015 : அரும்பாக்கிளையார். திரு. A.P. ஜெயபால் – புவனேஸ்வரி, பொன்னமராவதி, ஈராடு.**

23. ஏப்ரல் 2015 : கழுகக்கூருடையார், **தெய்வத்திரு. ம.வெ. நாராயணன் செட்டியார் – மீனாட்சி ஆச்சி** உலகம்பட்டி.

24. ஏப்ரல் 2015 : நாவலூருடையார். **திரு. சித. நடராஜன் செட்டியார், தெய்வத்திருமதி. இராஜம்மாள் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.

25. மே 2015 : நாவலூருடையார். **திரு. அரு.வே. மாணிக்கவேலு – சரஸ்வதி,** பொன்னமராவதி.

**26. ஜுலை 2015 : ஆமலூருடையார். திரு. வெ.இராம.சுப. செல்வம் B.Sc., ACA., – ஆனந்தம் ஆச்சி, அம்மன்குறிச்சி, சென்னை.**

27. ஜனவரி 2016 : அரும்பாக்கிளையார், தெய்வத்திரு. **மங்கைபாகன் செட்டியார் – சிகப்பி ஆச்சி,** புழுதிப்பட்டி.

28. மே 2016 : கழுகக்கூருடையார், **திரு. சி.சொ.மு. இராமையா செட்டியார் – தெய்வத்திருமதி. ஜெகநாதம் ஆச்சி,** கொன்னைப்பட்டி, தேனி.

29. செப்டம்பர் 2017 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. நேசமணி செட்டியார் – அருள்நிதி புவனேஸ்வரி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை.

30. ஜனவரி 2018 : பணப்பாக்கூருடையார் **தெய்வத்திரு. சுப. மணிவாசகம் செட்டியார் – தேன்மொழி ஆச்சி,** காரைக்குடி.

31. செப்டம்பர் 2018 : கழுகக்கூருடையார் **திரு. சோம. கதிரேசன் செட்டியார் – தவமணி ஆச்சி,** பொன்னமராவதி, தொட்டாம்பாளையம்.

32. ஜுலை 2019 : அரும்பாக்கிளையார் **திரு. பொன். சிவஞானம் செட்டியார் – ராஜகுமாரி ஆச்சி,** சிறுகுடி.

**33. ஆகஸ்ட் 2019 : நாவலூருடையார் தெய்வத்திரு. சித. மாணிக்கம் செட்டியார் – அழகுமீனாள் ஆச்சி, பொய்யாமணிப்பட்டி.**

**34. ஆகஸ்ட் 2019 : வரதலூருடையார் ந. செல்வம் செட்டியார் – சிவயோகம் ஆச்சி, புழுதிபட்டி / கோவை.**

**35. ஜனவரி 2020 : பழனி ஆதிசைவ அன்னதான மடம் – அருள்மிகு பழனி ஆண்டவர் அறக்கட்டளை, பழனி.**

36. மார்ச் 2020 : மேலுருடையார் **தெய்வத்திரு. செ.பெ.அ. அலங்காரம் செட்டியார் – திருமதி. செம்பாயி ஆச்சி,** சிறுகுடி.

**37. அக்டோபர் 2020 :** பொன்னமராவதி **பூண்டிலூருடையார்**
திரு. சி. வெள்ளனச்சாமி செட்டியார் - திருமதி. சாந்தி ஆச்சி, சிறுகுடி / கோவை.

**38. டிசம்பர் 2020 :** கழனிவாசலூருடையார் கிருங்காக்கோட்டை
திரு. V. லட்சுமணன் செட்டியார் - பாக்கியலட்சுமி ஆச்சி தம்பதியர்

**39. மே 2021 :** மேலூருடையார் செம்பூதி/பொன்னமராவதி தெய்வத்திருவாளர்கள்
தே.மா. சுப்பையா செட்டியார்- சுப. பூங்கோதை ஆச்சி

**40. டிசம்பர் 2021 :** ஒடுவன்பட்டி/தஞ்சாவூர் திரு S. மாணிக்கம் செட்டியார் – திருமதி சுசீலா ஆச்சி,

# ஹிந்தி மொழியில் B.A. பட்டம்

பொன்னமராவதி திரு A.T. முத்துக்குமார் செட்டியார், அவர்களின் புதல்வி செல்வி ம. கார்த்திகா, ஆகஸ்ட் 2021-இல் நடைபெற்ற ஹிந்தி மொழி தேர்வில் B.A., Praveen Uttarardh பட்டம் பெற்றுள்ளார். அதன் விவரம் வருமாறு :



| வ. எண். | தேர்வு ஆண்டு | தேர்வான விவரம் |
|---|---|---|
| 1. | ஜனவரி 2016 | Hindi Parichaya |
| 2. | ஆகஸ்ட் 2016 | Prathamic |
| 3. | பிப்ரவரி 2017 | Madhyama |
| 4. | ஆகஸ்ட் 2018 | Rashtrabhasha |
| 5. | பிப்ரவரி 2019 | Praveshika |
| 6. | ஆகஸ்ட் 2019 | Rashtrabhasha Visharad Poorvardh |
| 7. | 2020 | Rashtrabhasha Visharad |
| 8. | பிப்ரவரி 2021 | Rashtrabhasha Praveen Poorvardh |
| 9. | ஆகஸ்ட் 2021 | Praveen Uttarardh |

இவருக்கு 25-12-2021 சனிக்கிழமை அன்று பிரான்மலை மங்கைநாயகர் மன்றத்தில் நடைபெற்ற கல்விளர்ச்சிக் கழக முப்பெரும் விழாவில் வெள்ளிப் பதக்கம், புத்தகப்பரிசு மற்றும் பாராட்டுச் சான்றிதழ் வழங்கப்பெற்றது.

**டிப்ஸ்...**

வீட்டில் எறும்பு புற்று இருந்தால் அங்கே கொஞ்சம் பெருங்காயத் தூளைத் தூவி விட்டால் எறும்புத் தொல்லை இருக்காது. **– S. சூர்யா, கோவை.**

# வாசகர் குரல்

**வாசகர் குரல் 156-1**

மதிப்பிற்குரிய குரல் ஆசிரியர் அவர்களுக்கு வணக்கம். இப்பவும் 2021 நவம்பர் மாத நகரத்தார் குரலில் பக்கம் 45-இல் வாசகர் குரல் 155-5-இல் கோவை P.L.R. அவர்கள் எழுதியுள்ளது போல நமது சமுதாயத்தில் பல திருமணங்கள் நடைபெற்று பின் விளைவுகளால் பெரும் பாதிப்புகள் ஏற்பட்டு இரு குடும்பத்தார்களுமே திகைத்து வெளியில் சொல்ல முடியாமல் என்ன செய்வதென்று வழி தெரியாமல் கண் கலங்கி துன்பப்பட்டு வாழ்கின்றார்கள். ஏன் இந்த நிலைமை. இதற்கெல்லாம் காரணம் யாராக இருந்தாலும் உண்மையை மறைப்பதால் வரும் துன்பங்களே. இனிவரும் காலங்களிலாவது இதுபோன்று நிகழாமல் சம்பந்தப்பட்டவர்கள் தவிர்த்தல் வேண்டும். உண்மையே பேசுதல் வேண்டும்.

**- C.R. மாணிக்கம், பிரான்மலை.**

**வாசகர் குரல் 156-2**

அருவியூர் நகரத்தார் குரல் நவம்பர் 2021 இதழில் திரு ஆசை அலங்காரம் அவர்கள் எழுதிய சிறுமியும் இரண்டு ஆப்பிளும் கதையின் மூலம் அனுபவசாலியாக இருந்தாலும் பிறரை குறை கூறுவதற்கு முன்பு, அவர் செய்த நன்மையான செயல்களை நினைத்துப் பார்த்து (தாயிடம் சுவையான ஆப்பிளை கொடுத்த சிறுமி போல) அவர்களுடைய மனம் புண்படும்படியான சொற்களை கூறக்கூடாது என்ற கருத்து மிகவும் நன்று. அன்பு சகோதரர் அனைத்து நகரத்தார் குரல்களிலும் அருமையான கருத்துக்களை எழுதி வருகின்றார். பாராட்டுக்கள்.

தெய்வத்திரு சுப. செல்வம் அவர்கள் எழுதியிருந்த ஓய்வு பற்றிய கட்டுரை, மனஅமைதி, சதாபிஷேகம், அன்னதானம் கன்னிகாதானம், முதுமைக்காலம், வாழ்க்கைக்கு பயன் உள்ளவை. வாழ்நாள் முழுவதற்கான வாழ்க்கைத் துணை என்ற தலைப்பில் உடம்பும் ஆன்மாவும் மட்டுமே என எழுதியிருந்தார். ஆன்மாவிற்கு நல்ல எண்ணங்களையும், உடல் நல்ல முறையில் பேணி காக்கவும் கூறியுள்ளார்.

அவருடைய சகோதரர் தெய்வத்திரு சுப. துரைராஜ் அவர்கள் போல் இறுதிவரை சமூக நலனுக்காக உழைத்து புகழுடன் இறைவனடி சேர்ந்துவிட்டார்.

ஆன்மீகப்பகுதியில் 63 நாயன்மார்களைப்பற்றி சிறந்த முறையில் கட்டுரைகள் எழுதிவரும் அன்பு சகோதரர் சைவப்புலவர் சிவகுரு V.N. சுந்தரம் M.A. அவர்கள் பாராட்டுக்குரியவர். நகரத்தார் பெருமக்கள் அனைவரும் சிவதீட்சை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று திருமதி ஆனந்த செல்வம் அவர்கள் எழுதிய அனைத்துக் கட்டுரைகளும் கருத்துக்கள் நிறைந்தவை. பாராட்டுக்கள்.

31 தடவை ரத்ததானம் அளித்ததற்கு திரு PL. ராமஜெயம் கொடுத்த ரூ.5001/- ஐ திரு தே. கண்ணன் அவர்கள் அரங்க மேடையிலேயே கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு கொடுத்ததை பாராட்டுகின்றோம். அவர் நீண்ட ஆயுளுடன் வாழ இறைவனை வேண்டுகின்றோம்.

**– V. கணேசன், தலைவர், அ.வ.ந. சங்கம், V. புதூர்**

# சிவபாதம் சேர்ந்தார்

நாலு கரணங்களும் ஒன்றாய், நல்ல அறிவு மேற்கொண்டு,
காலும் பிரம்மநாடி வழிக் கருத்துச் செலுத்தி, கபாலநடு
ஏலவே முன்பயின்ற நெறி, எடுத்த மறை மூலம் திறப்ப
மூலமுதல்வர் திருப்பாதம் அணைவார், கயிலை முன் அடைந்தார்.

**– திருமுறை**

தங்களது உறவுகளை இழந்து தவிக்கும் குடும்பத்தினருக்கு ஆழ்ந்த இரங்கலையும், வருத்தத்தையும் தெரிவித்துக் கொள்வதோடு இறைவனடி சேர்ந்தோர்களின் ஆன்மா சாந்தி அடைய வேண்டுகிறோம். **– குரல் நிர்வாகம்**

- சிறுகுடி தெய்வத்திரு பெ. கதிரேசன் செட்டியார் அவர்களின் மனைவியும், கோவை திரு க. ஜெகஜீவன் செட்டியார் மற்றும் திரு க. சோலைராஜன் செட்டியார் இவர்களது தாயாருமான **திருமதி க. விமலாதேவி ஆச்சி** அவர்கள் 12.11.2021 வெள்ளிக்கிழமை அன்று இறைவனடி சேர்ந்தார்கள்.

  **தகவல் : திரு பிரகாஷ், கோவை.**

- கோவை - புழுதிபட்டி திரு M. பரமசிவம் செட்டியார் அவர்களது மனைவியும் திரு முத்தமிழ் செல்வன் அவர்களது தாயாருமான **திருமதி கவிதா (எ) மீனாட்சி ஆச்சி** 03-12-2021 அன்று இறைவனடி சேர்ந்தார். அன்னாரது மறைவிற்கு ஆழ்ந்த இரங்கலை தெரிவித்து, ஆன்மா சாந்தி அடைய வேண்டுபவர்கள்.

  **தகவல் : அ.வ.ந. சங்கம், இளைஞர் பேரவை, கோவை மற்றும் திரு. A.P. ஸேதுராமன் குடும்பத்தார்கள்.**

- நமது கல்வி வளர்ச்சிக் கழகச் செயலாளர் **திரு சுப. செல்வம்** அவர்கள் 6-11-2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள் என்பதை ஆழ்ந்த வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

  **– குரல் நிர்வாகிகள்**

- கல்லம்பட்டி சேதுராமன் செட்டியார் மனைவியும், திரு சே. சொக்கலிங்கம் I.A.S. திரு சிங்காரவேலன், திரு செந்தில்நாதன் ஆகியோரின் தாயாருமான **திருமதி சிவஜோதி ஆச்சி** அவர்கள் 14.12.2021 அன்று இறைவனடி சேர்ந்தார்கள்.

  **தகவல் : வாட்ஸ்அப் செய்தி**

- மதுரை திரு J. கணேஷ் செட்டியார் - திருமதி கவிதா ஆச்சி இவர்களின் புதல்வன் G. கார்த்திகேயன் உடல் நலக்குறைவால் 21-12-2021-ல் அதிகாலை 3-00 மணியளவில் இறைவனடி சேர்ந்தார். **தகவல் : சின்னத்தம்பி (எ) மணி செட்டியார், சிறுகுடி**

# சக்தி

நம் ஒவ்வொருவருக்குள்ளும் ஒரு மகாசக்தி இருக்கிறது. அது நம்முடைய பார்வைக்குத் தெரியாவிட்டாலும்கூட நம்மால் அதனைப் பயன்படுத்திக் கொண்டு பிரமாதமான பலன்களைப் பெறமுடியும் என்கிறார் ரோண்டா பைர்ன்.

இந்த உலகம் பார்த்திருக்கிற புதிய கண்டுபிடிப்புகள், கலைப் படைப்புகள், மருத்துவ சிகிச்சைகள், புத்தகங்கள், இசைத் தொகுப்புகள் இன்னும் நம்மைச் சுற்றியிருக்கிற எல்லாமே இந்த ஒரு சக்தியின் துணையோடு உருவாக்கப்பட்டவை தான். சராசரி மனித மனத்தில் நல்ல சிந்தனைகள், கெட்ட சிந்தனைகள் இரண்டுமே உண்டு. அவற்றின் விகிதம் மாறலாமே தவிர, முழுக்க முழுக்க நல்லதை மட்டுமே நினைக்கிறவர் என்று யாரும் கிடையாது. வெறுப்புச் சிந்தனைகளின் தாக்கத்தைக் குறைத்து அன்புச் சிந்தனைகளை ஊக்குவித்து வாழ்க்கையில் அமைதி, நிம்மதி, செயல்திறன், சாதனைகள் என்று படிப்படியாக மேலே அழைத்துச் செல்கிறது. நமக்குள் இருக்கும் அந்தச் சக்தியை அடையாளம் காண்பது எப்படி? அதை வெளிக்கொண்டுவருவது எப்படி? எதையும் சாதிக்கக்கூடிய இந்த சக்தி பூட்டைத் திறப்பதற்கு ரோண்டா மூன்று சாவிகளைச் சொல்லித்தருகிறார். அவை:

1. அன்புச் சாவி

2. நன்றிச் சாவி

3. விளையாட்டுச் சாவி

**1. அன்புச் சாவி :**

உலகின் மிக உன்னதமான ஆற்றல், அன்புதான். அதைக் கொண்டு எந்தக் கதவையும் திறந்துவிடலாம். ஒரு மனிதரை, ஒரு குடும்பத்தை, ஒரு வீட்டை, ஒரு நாட்டை மட்டும் நேசித்தால் போதாது. ஒட்டுமொத்த உலகத்தையும் மானுடகுலத்தையும் நேசிக்கப் பழுகுங்கள். அதனால் உங்கள்

தனிப்பட்ட வாழ்க்கை அழகாகும். நீங்கள் எதையெல்லாம், யாரையெல்லாம் நேசிக்கிறீர்கள்? மனதுக்குள் ஒரு லிஸ்ட் போட்டுக்கொள்ளுங்கள். ஒவ்வொரு நாளும் அந்த அன்புப் பட்டியலில் உள்ளவர்கள் மத்தியிலேயே அதிக நேரம் செலவிடுங்கள். அதன்மூலம் ஏற்படுகிற மகிழ்ச்சியும், திருப்தியும் உங்களுடைய செயல்திறனை உயர்த்தும், உங்களை ஒரு புதிய மனிதராக மாற்றிவிடும்.

**2. நன்றிச் சாவி :**

வாழ்க்கை இதுவரை உங்களுக்குத் தந்திருக்கிற, தந்து கொண்டிருக்கின்ற, இனி தரப்போகிற எல்லா விஷயங்களுக்காகவும் மனமார நன்றி சொல்லிப் பழுகுங்கள். உரக்கச் சொல்ல வேண்டாம். மனதுக்குள் அதை உணர்ந்தாலே போதும். நீங்கள் சந்திக்கிற எல்லோரும் உங்களுக்கு ஏதோ ஒரு விதத்தில் உதவுகிறார்கள். ஏதாவது பாடம் சொல்லித்தருகிறார்கள். அந்த உதவி சிறியதோ, பெரியதோ, வாய் திறந்து நன்றி சொல்லுங்கள். உலகம் உங்களை இன்னும் நேசிக்கும். உங்களுடைய வளர்ச்சிக்கு அவர்கள் உதவுவார்கள்.

**3. விளையாட்டுச் சாவி :**

வாழ்க்கை என்பது சீரியஸான மேட்டர் அல்ல. மனம் விட்டுச் சிரியுங்கள். ஒவ்வொரு கணத்தையும் அனுபவியுங்கள். சுருக்கமாகச் சொல்வதென்றால் சும்மா பூந்து விளையாடுங்கள். சிறுவயதில் நாமெல்லாம் சந்தோஷமாக விளையாடிக் கொண்டிருந்தவர்கள் தான். வயது ஏற ஏற விளையாட்டை அலட்சியப்படுத்துகிறோம். அதனால் தான் அநாவசியப் பதற்றம், பரபரப்பு, டென்ஷன் எல்லாமே.

சின்ன வயதில் விளையாட்டாய் நிறைய கற்பனைகள் செய்வோம். ஆனால் வயது ஏறும்போது கற்பனைகளைக் குறைத்து விடுகிறோம். கற்பனை என்பது ஒரு மிகப்பெரிய வரம். அதை வைத்துக் கொண்டு நாம் எங்கேயும் பயணம் செய்யலாம். நம்முடைய பாதையை நாமே உருவாக்கிக் கொள்ளலாம். உங்கள் கற்பனைக் குதிரைக்கு ஓய்வே

கொடுக்காதீர்கள். தொடர்ந்து ஓட விடுங்கள். அது மேலும் மேலும் புதிய இலக்குகளை கற்பனை செய்யட்டும். அதன்மீது உட்கார்ந்து சவாரி செய்யும் நீங்களும் புதுப்புது சிகரங்களைத் தொடுவீர்கள். நம்பிக்கை உள்ள ஒருவருக்கு எதுவும் சாத்தியம் என்கிறது பைபிள். நம் ஊரிலும் நம்பினோர் கெடுவதில்லை என்று ஒரு வாசகம் உண்டு.

ரோண்டா பைர்ன் சொல்லும் மகாசக்தி எது என்று நமக்குப் புரியாவிட்டாலும் கூடப் பரவாயில்லை. அப்படி ஒன்று நமக்குள் எங்கேயோ இருக்கிறது என்று நம்பிக்கை மட்டும் வைத்து, அன்பு, நன்றி, விளையாட்டு என்கிற மூன்று சாவிகளைப் பயன்படுத்திப் பார்க்கலாமே! வாழ்க்கை இன்ப மயமாக அமைய!

**- M.D. பிரியதர்சினி, தீப அலங்கார், திண்டுக்கல்.**

# நினைவஞ்சலி



**தெய்வத்திரு முத்துபழனி செட்டியார்**

பூர்வீகம்: சொக்கம்பட்டி **மறைவு: 14-12-2021**

உங்கள் நினைவில் வாழும் மனைவி

**திருமதி சிவஜோதி ஆச்சி**

**மகன்கள் - மருமகள்கள் :**

திரு மு. ராஜேந்திரன் - திருமதி ரா. சாந்தி

திரு மு. பூமிநாதன் - திருமதி பூ. தீபலெட்சுமி

# தொழில் செய்வோம்! முன்னேறுவோம்!!

## வாருங்கள்...

**நம் அருவியூர் சொந்தங்களே!!**

**என்ன தொழில் செய்யலாம்?**

மருந்துகள் மொத்த வியாபாரம் செய்யலாம்.

உங்கள் குரல் : ஏன் மருந்து வியாபாரம்? வேறு ஏதாவது செய்யலாமே?

**மருந்து வியாபாரம் என்பது ஒரு மரியாதையான, நஷ்டம் வராத தொழில்.**

**எங்கே நடத்தலாம்?**

சென்னை, கோவை, மதுரை, திருச்சி ஆகிய ஊர்களில் நடத்தலாம்.

**எந்த ஊர் சிறப்பாக இருக்கும்?** சென்னை சிறப்பாக இருக்கும்.

**ஏன்?**

மற்ற ஊர்களில் சில்லறை மருந்துக் கடைகளுக்கு டிஸ்கவுண்ட் அதிகம் கொடுக்க வேண்டும். ஆனால் சென்னையில் 2%, 3% மட்டுமே. நாம் 4% மற்றும் அதிகம் கொள்முதல் செய்பவர்களுக்கு மட்டும் 5% கொடுக்கலாம். அதிலும், நம்மவர்கள் அதிகம் சில்லரை மருந்துக் கடை வைத்துள்ளார்கள். எனவே, சுலபமாக வியாபாரம் செய்யலாம்.

**யார் இந்தத் தொழில் செய்வது?**

நானும், நீங்களும் இணைந்துதான்.

**(உங்கள் குரல்) ஹுக்கும்...நாங்களா? எங்களுக்கு மருந்து வியாபாரம் பற்றித் தெரியாதே! இதெல்லாம் சாத்தியமா?**

நிச்சயம் சாத்தியமே. இன்று டாட்டா, ரிலையன்ஸ், அமேசான் போன்ற நிறுவனங்களின் உரிமையாளர்களுக்கு அந்தந்த வியாபாரத்தைப் பற்றி என்ன தெரியும்? ஆனால் அவர்கள் உலக அளவில், ஏன்? நம் ஊரிலும், நம்மிடமே வியாபாரம் செய்து, நல்ல இலாபம் சம்பாதிக்கவில்லையா? அவர்கள் என்ன செய்கிறார்கள்? அவர்களிடம் பணம் உள்ளது. மற்றவர்களிடம் ஷேராக பணம் வாங்குகிறார்கள் அந்தந்த தொழிலுக்குத் தகுதியான ஆட்களைப் பணியில் அமர்த்தி, மிக அதிக அளவில் வியாபாரம் செய்கிறார்கள். சம்பாதிக்கிறார்கள்.

**(உங்கள் குரல்) ஏங்க! டாடா, பிர்லா எங்கே? நாம் எங்கே? அவர்களுடன் நாம் போட்டி போட முடியுமா? இதெல்லாம் சரியாக வருமா?**

தாராளமாக சரியாக வரும். நாம் அவர்களுடன் போட்டிக்குப் போகவில்லை. டாட்டாவோ, பிர்லாவோ வேறு எந்தப் பெரிய கம்பெனிகளோ இதுவரை கால் வைக்காத ஒரே தொழில் நமது மருந்து மொத்த வியாபாரம் மட்டுமே. நாம் அதில் முதலாவதாக ஆரம்பித்து சாதிப்போம்.

**இதற்கு எவ்வளவு பணம் வேண்டும்?**

ரொம்ப சிம்பிள். அதிகம் இல்லை, ஜென்டில்மேன். சும்மா ஒரு கோடி ரூபாய் மட்டும்.

**(உங்களில் சிலர் குரல்) அது சரி.. ஒரு கோடியா!! அப்போ இது எங்களுக்கான வாய்ப்பு இல்லை? வெறும் படம் மட்டும் தான் காட்டுகிறீர்களா?**

கொஞ்சம் பொறுங்கள். ஒரு கோடி இல்லை. ரூ.10,000/- வீதம் 1000 பேர் (ஷேர்) அவ்வளவேதான்.

**(உங்கள் குரல்) என்னங்க ஒரு கோடி என்று சொன்னீர்கள். இப்போ ரூ.10,000/- 1000 ன்னு சொல்கிறீர்கள் கொஞ்சம் குழப்பமாக இருக்கே!!**

ஒரு ஷேருக்கான தொகை ரூ.10,000/- இதே போல் 1000 ஷேர்கள்.மொத்த மதிப்பு ரூபாய் ஒரு கோடி சரி தானே....

(உங்கள் குரல்) அட ஆமா! ஒரு கோடி கணக்கு வருதே ரூ.10,000/- என்றால் பரவாயில்லையே. இதில் வாய்ப்பு எனக்கும் உண்டு போல தெரிகிறதே!

**ஒருவருக்கு எத்தனை ஷேர் வாங்கலாம்?**

எத்தனை ஷேர் வேண்டுமானாலும் வாங்கலாம். கட்டுப்பாடு இல்லை.

**(உங்கள் குரல்) இதுவும் கொஞ்சம் நல்லாத்தான் இருக்குதே சரிங்க. இந்தத் தொழிலைப் பற்றிய விளக்கத்தைச் சொல்லுங்க..**

கொஞ்சம் விளக்கமா சொல்றேன்... பொறுமையா கேளுங்க

மருந்து உற்பத்தியாளர்கள், சூப்பர் ஸ்டாக்கிஸ்ட், ஸ்டாக்கிஸ்ட்டுகள், சப் ஸ்டாக்கிஸ்ட்டுகள் (நாம்) மருந்துக் கடைக்காரர்கள், மக்கள்

முதலில் மருந்துக் கம்பெனிகள் உற்பத்தி செய்து, ஒவ்வொரு மாநிலத்திற்கும் (C & F) மற்றும் சூப்பர் ஸ்டாக்கிஸ்டுகளுக்கு அனுப்பும்; அந்தந்த கம்பெனிகளுக்கு சிலரை ஸ்டாக்கிஸ்ட்டாக நியமனம் செய்யும்; அந்தந்த ஸ்டாக்கிஸ்ட்டுகள் நம்மைப் போன்ற சப் ஸ்டாக்கிஸ்டுகளுக்கு மருந்துகள் தருவார்கள்; நம்மிடம், சில்லரை மருந்துக்கடைக்காரர்கள், வாங்கி மக்களுக்கு விற்பனை செய்வார்கள்.
**(உங்கள் குரல்) அம்மாடியோவ்! இதில் இத்தனை படிகள் உள்ளனவா சரி**

**நமக்கு என்ன இலாபம் கிடைக்கும்? அதை முதலில் சொல்லுங்கள்? பிரதர்!**

கம்பெனிகள், ஸ்டாக்கிஸ்டுகளுக்கு 10% லாபமும், ஸ்டாக்கிஸ்டுகளுக்கு 6% முதல் ரொக்க கொள்முதல் மற்றும் அட்வான்ஸ் பணம் செலுத்துபவர்களுக்கு 9% வரை தருவார்கள்.

**(உங்கள் குரல்) அது சரி நமக்கு ஆறா? ஏழா? எட்டா? அதைச் சொல்லுங்க....**

நாம் ஏற்கனவே மருந்து மொத்த வியாபாரத்தில் தொடர்புடையவர்கள் ஆதலால் நிச்சயமாக 9% வாங்கலாம். (இன்சுலின் மற்றும் உணவுப் பொருட்கள் தவிர)

**(உங்கள் குரல்) இன்றைய சூழலில் பணம் கூட புரட்டி விடலாம்... வேலை ஆட்கள் எத்தனை பேர் தேவை? எப்படி கிடைப்பார்கள்?**

**குறைந்தபட்ச பணியாளர்கள்**

1. பொறுப்பாளர் - 1, 2. மேலாளர் - 1, 3. சேல்ஸ்மேன் - 2

4. கம்ப்யூட்டர் பில்போடுபவர் - 1, 5. ஸ்டாக் எடுக்க - 2, 6. டெலிவரி - 2. மொத்தம் - 9 பேர்

**செலவினங்கள்**

வாடகை, கரண்ட் பில், செல்போன் பில், இதர சில்லரை செலவுகள்.

இவர்களுக்கான மொத்த செலவு சுமார் மாதம் ஒன்றுக்கு ரூ.1 லட்சம்.

**(உங்களில் சிலர் குரல்) அடேங்கப்பா 1 லட்சமா! கம்பெனி தாங்குமா? கொஞ்சம் சீக்கிரமா சொல்லுங்கண்ணே சொல்லுங்க**

பயப்படாதீங்க! கணக்கு சொல்கிறேன், பொறுமையாக கேளுங்க.... நமது விற்பனை இலக்கு மாதம் 1 கோடி. நமக்கு கிடைக்கும் லாபம் - 9% நாம் கொடுக்கும் தள்ளுபடி - 5% மீதி லாபம் - 4% 1 கோடிக்கு நமது லாபம் - மாதம் ஒன்றுக்கு 4 லட்சம், ஒரு லட்சம் செலவு போக லாபம் - 3 லட்சம்.

**(உங்கள் குரல்) ஏங்க 1 கோடி வியாபாரம் செய்ய முடியுமா? ஒரு நாளுக்கு 4 லட்சம் ரூபாய் வியாபாரம் செய்ய முடியுமா? இது என்ன மந்திரத்தில் மாங்காய் காய்க்கிற விசயமா?**

நமது இலக்கை எட்டுவதற்கான கால அவகாசம் சுமார் 6 மாதம். இந்த 6 மாத காலத்தில் சுமார் 100 கடைகளையாவது நாம் பிடிக்க வேண்டும். சராசரியாக 80 கடைகள் 5,000/- ரூபாய்க்கு தினசரி ஆர்டர் எடுத்தால் நிச்சயம் நம் இலக்கை குறித்த காலத்தில் உறுதியாக எட்ட முடியும்.

**(உங்களில் ஏற்கனவே மருந்துகடை நடத்துபவர்களின் குரல்)**

ஹலோ! 1 கோடி முதலீட்டில் மாதம் ரூ.1 கோடி வியாபாரம் செய்ய முடியுமா? ஸ்டாக்குக்கு முதலீடு வேண்டும். பார்ட்டிகளிடம் நிலுவைத் தொகை நிற்கும். இது எப்படி சாத்தியம்?

ஹலோ! கொஞ்சம் பொறுமை. நாம் வாரா வாரம் மாதத்திற்கு 4 முறை கொள்முதல் செய்வதால், ஸ்டாக்குக்கு பெரிய முதலீடு தேங்காது. நாம் நமது பார்ட்டிகளிடம் வாராந்திர வசூல் திங்கள் முதல் சனிக்கிழமை வரை உள்ள பில்களுக்கு அந்த ஞாயிறு போக திங்கள் கிழமை மூலம் பணம் வசூல் செய்து விடலாம். எனவே பணத்தட்டுப்பாடு இருக்காது.

(என் உள் மனது) அப்பாடியோ! எப்படியோ முதலீட்டார்கள் மற்றும் வாடிக்கையாளர்களுக்கு வாராந்திர வசூல் என்பதை உறுதி செய்துவிட்டோம்.

**(உங்கள் குரல்) ஏதோ நீங்க சொல்கிற கணக்கு கொஞ்சம் சரியா தான் வருது ஆனா அதுக்கு நிறைய முயற்சி செய்யனும்.**

ஆமாங்க.. கண்டிப்பாக நிறைய முயற்சி செய்வோம் வெற்றி பெறுவோம். அதுவும் முயற்சி மட்டுமல்ல, அதற்கு நிறைய உழைக்கவும் வேண்டும்.. சரியான பெரிய கம்பெனிகளின் பொருட்களை வாங்க வேண்டும்.

**என்னென்ன கம்பெனிகளின் மருந்துகள் வாங்கப் போகிறோம்?**

டாப் சேல்ஸ் உள்ள பெரிய கம்பெனிகள் அனைத்துமே வாங்கலாம். அப்போதுதான் நமது வாடிக்கையாளர்களிடம் ஆர்டர் சுலபமாக கிடைக்கும்.

**(உங்கள் குரல்) அதெல்லாம் நீங்க பார்த்துகுங்க. எங்களுக்கு வருடா வருடம் எவ்வளவு தருவீர்கள்?**

நமது திட்டத்தின்படி 10 ஷேர்கள் (அதாவது 1 லட்ச ரூபாய்) முதலீடு செய்தவர்களுக்கு ரூ. 24,000/- வரை லட்சியம். ரூ. 18,000/- வரை நிச்சயம்.

**(உங்கள் குரல்) 2 வட்டிவரை கிடைக்கும் நீங்க 1½ வட்டி உறுதியா நம்பலாமா?**

ஆமாங்க **1½** வட்டி உறுதியா கிடைக்கும்னு நம்புவோம். வங்கியில் முதலீடு செய்வதைவிட மும்மடங்கு வருமானம் உறுதி.

**(உங்களில் சிலர் குரல்) இந்தத் தொகையை எப்போ தருவீங்க?**

ஒவ்வொரு வருடமும் முடிந்தவுடன் ஒரு கூட்டம் ஏற்பாடு செய்து, ஆடிட் செய்த கணக்குகளை வாசித்து அவரவர் முதலீட்டிற்கேற்ப அவரவர் தொகை அன்றே மேடையில் வழங்கப்படும். இதில் அனைத்து சட்ட திட்டங்களிலும், நியாயமான

நடைமுறைகளும், வழிகாட்டுதல் குழுவினரின் ஆலோசனை கேட்டு கண்டிப்பாக கடைபிடிக்கப்படும்.

**(ஏற்கனவே முதலீடு செய்திருக்கும் உங்கள் குரல்)**

நீங்க சொல்றது சரியாகத்தான் வருது. வங்கியிலும், தெரிந்தவர்களிடமும் ½ வட்டி ¾ வட்டி வாங்குவதை விட நீங்க சொல்ற மாதிரி 1½, 2 வட்டி வாங்குறதுங்கிறது நல்லாத்தான் இருக்குது. நாமும் முதலீடு செய்யலாம்ங்கிற தைரியம் வந்துருச்சு.

**உங்கள் கேள்வி : ஏங்க இப்படி எங்களுக்கு 1½, 2 வட்டி தருவதற்குப் பதில், நீங்கள் வங்கியில் லோன் வாங்கினால் 10%, 12% அதாவது வருடத்திற்கு ஒன்று வட்டிக்குள்ளேயே கிடைக்குமே அது உங்களுக்குத் தானே லாபம்?**

**என் பதில்**

வங்கியில் கடன் பெறலாம். ஆனால் யாரோ ஒரு வங்கிக்கு வட்டியாக கொடுப்பதை விட நம்மவர்களுக்கு ஒரு லாபகரமான தொழிலை தரலாமே என்ற நல்ல எண்ணத்திலேயே இதை தெரிவித்திருக்கிறேன்.

(என் உறுதி) நீங்கள் அனைவரும் சரியாக ஒத்துழைப்பு கொடுத்தால், இந்தத் திட்டம் நிறைவேறுவதற்கும் உங்களது முதலீடு மற்றும் லாபத்திற்கும் நான் பொறுப்பு என்று உறுதி கூறுகிறேன்.

**அப்ப ஆரம்பிச்சுடலாமா?**

**(உங்கள் அனைவரின் குரல்) பேஷா ஆரம்பிச்சுடலாம் எப்போ ஆரம்பிக்க போறோம்,**

நீங்க ஓக்கேன்னா அதிகபட்சம் 2 மாதத்திற்குள் ஆரம்பிச்சுடலாம்.

**(உங்கள் குரல்) என்ன பெயர் வைக்கப் போகிறீர்கள்? எங்கிட்ட மட்டும் ரகசியமா சொல்லுங்களேன்.**

உரத்த குரலில் அனைவருக்கும் சொல்கிறேன் (விரைவில்)

உங்கள் அனைவரின் உற்சாகமான குரல் என் காதில் கேட்கிறது வாழ்க வளமுடன் என்று.

**(எனது குரல்) ஆம் வாழ்வோம் வளமுடன்**

என்றும் உங்கள் அன்புடன்
**கே. சிவநேசன்,**
ஜெயா மெடிக்கல்ஸ், திருச்சி
ஸ்ரீ குரு ஏஜென்சி, பெரம்பலூர்
S.S. பார்மா, கோவை.
தொடர்புக்கு : 98424 734497

**ஸ்ரீ மங்கைபாகர் தேனம்மை திருமண தகவல் மையம், கோவை**

இலவச சேவை-கட்டணம் இல்லை. பதிவிடுங்கள்

சமூகப் பெருமக்களே! பெற்றோர்களே!

மணமகன்-மணமகள் தேவைக்கு உரிய விவரத்துடன் தபால் அனுப்புங்கள். வரிசைப்படி நம்பர் பதிவு செய்து பதிவேட்டில் விபரம் எழுதி விரைவில் திருமணம் கைகூட வழி காண்பிக்கிறோம். 18-07-2006-இல் தொடங்கிய இச்சேவையில் பதிவானது 495. இணைந்த தம்பதிகள் 374. காத்து இருப்பது ஆண் - 102, பெண் - 19, ஆக 121. பெண் பதிவு மிக மிக குறைவு. பெண்வீட்டார்கள் முன் வந்து பதிவு கொடுத்தால் சமூக இனம் பெருக சமூகம் வளரும். பெண் வீட்டார்கள் ஒத்துழைப்பு கொடுக்க வேண்டுகிறோம்.


திரு. P.L. ரெங்கசாமி

பி.எல்.ஆர். திருமுருகன் ஸ்டோர்ஸ்
நெ. 18, எம்.கே.ஜி. லே அவுட்
ITI பின்புறம் GN மில்
கோயமுத்தூர் - 641 029.
செல் : 99523 49855

குறிப்பு : நேரில் வந்து கலந்து பேசினால் உடன் திருமணம் கைகூட வாய்ப்பு அதிகம்.

எட்டாம் ஆண்டு

# நினைவு அஞ்சலி



தெய்வத்திரு

## A.P. சரவண ஐயப்பன்

நினைவுகளுடன்

## குடும்பத்தார்கள்

1936

ஆதிகாலத்து
அலங்கார மாளிகை

பொன்னமராவதி | புதுக்கோட்டை

ஆனந்த்
பைப்ஸ்

ஈரோடு • மதுரை • திருச்சி